என்ன பயங்கரமான கனவு!

''அம்மா .! எவ்வளவு பயஙகரமான கனவு?

அதறகுப் பின ராஜாவுக்கு உறக்கம் வரவில்லை. பொழுது புலாநது கொணடிருநதது எழுநது துண்டையும பறபசையையும எடுத்துககொணடு குளியலறையை நோககி நடநதான ராஜா.

## அத்தியாயம் : 21

சியாமளா நெடுநேரம் வரை படுக்கை அறையிலிருந்து வெளியே வரவில்லை. நேரத்திலேயே எழுநது விட்ட ராஜா வழககமபோல சிறறுணடி சாபபிட்டு விட்டு ஆபீசுக்குச் சென்ருன

அனறு ரிஷி கேஷ செல்லும் யாத்திரிகர்களைக் கொணட இரணடு பஸகளும டேராடூனுககு ஒனறுமாக மூனறு பஸகள புறபபட்டன ரிஷி கேஷ யாததிரை நீண்ட நாள பிரயாணம. ஆகையால் அதறகான ஏற் பாடுகளை மேற்பாரவையிட வேண்டிய அவசியம் இருந தது.

ராஜா அலுவலகத்தில் தனனுடைய வேலைகளைக் கவனிததுக் கொணடிருநதான இரண்டு தடவை ஸ்டெல்லாமேரி டைப அடித்த காகிதங்களைக் கொணடு வநது வைத்துவிட்டுப் போனுள மாலை ஐநது மணிககு அவனை வீட்டுக்கு அழைத்துககொண்டு போவதறகாகச் சியாமளா காரை எடுததுககொண்டு வநதாள. எல்லாம் வழக்கபபடியே நடநதன.

இரண்டு பேரும் காரில் போய்க்கொண்டிருந்த போது, சியாமளா ராஜாவைப் பார்த்து, ''நேற்றுத் தெரிநதுகொணட 'உண்மைகளுக்குப்' பின்னர் எனனைப் பறறி என்ன முடிவு செய்தீரகள்?'' என்று கேட்டாள்.

"என்னுடைய தங்கை மிகவும் புத்திசாலி என்ற முடிவுக்கே வநதேன் சியாமளா! மனமோகனைப்போனற வாகளைக் கணடு பெண்கள் சீக்கிரம தஙகள இதயங் களைப பறிகொடுத்து விடுவாாகளா. கலைஞர்கள எல லோருக்குமே அபபடி ஒரு வசீகர சக்தி இருககத்தான் செய்கிறது ஆனால... தகக சமயததில் அபபடிபபட்ட ஒரு காதல போதையிலிருநது விழிததுககொண்டு உன் னுடைய வாழககையைபபறறி நீ சிநதிககத தொடங் கியது மிகவும அறபுதம சியாமளா? வேறொருபெண்ணாக இருநதால காதலுககு அவள பலியே ஆகியிருபபாள." எனறான ராஜா.

"எனனுடைய பலஹீனத்தை மூடி மறைக்கிறீர்கள் ராஜா... இநத அளவு என்மேல கருணை காட்டுகிறீர் களே அதறகாக நான மிகவும் கடமைபபட்டிருகக வேணடும."—துயரத்தை அடககிககொணடு நிதான மான குரலில் கூறினாள் சியாமளா.

ராஜா சிறிது நேரம பேசவிலலை பிறகு தனககுத் தானே பேசிக கொளவதுபோல, "எனனுடைய வாழககை மிகவும கடுமையானது சியாமளா. என னுடைய மனம் மரத்துப்போய் விட்டது உணாசசிகள் முறுககேறிக காழத்துபபோய்க் கிடககினறன ..என்னைப் போனற ஒரு மனிதனோடு உனனைபபோனற ஒரு இளங் கொடி வாழமுடியாது சியாமளா... உனககுத தகுதியான அழகான இளைஞன ஒருவனைப பாாதது மணம செயது வைககவேணடும. அது எனனுடைய கடமை..." என றான.

சியாமளா நீண்ட பெருமூச்சு விட்டாள். அவ ளுடைய கண்களில கணணீாத் துளிகள அருமபி

"என்மேல் உங்களுக்கு விருப்பமில்லை யென்றால்... நான் உஙகளை வறபுறுதத முடியாது ராஜ...ஆனால...? என இதயம தகாநது போய விட்டது ராஜ...என இதயம தகாந்து போய விட்டது ..நான உங்களிடததில் என் உயிரையே வைத்திருநதேன்..."

காரை ஓட்ட முடியாமல் சியாமளா தத்தளித்தாள். திடீரென்று ஒரு ஓரமாக நிறுத்திவிட்டு முன்றுனையால் கணகளைத் துடைததுககொண்டாள்.

"சியாமளா .!" என்று பதற்றத்துடன் அவளுடைய கைகளைப பிடித்தான் ராஜா.

சியாமளா தன் கைகளைப் பிடுங்கிக்கொண்டாள்.

"பேசாதீர்களா ராஜ... ஆறுதல மொழிகளால் என்னை நீஙகள தேறற முடியாது மனமோகனும் நானும சுறறியலைநதது இநத நகரததில எலலோருககும தெரியும நான அவனமேல மூடததனமான காதல் கொண்டிருநதேன. என் பெயரை மிகவும கெடுத்துக் கொணடேன... உஙகளுடைய கருணையால நான திரும பவும வாழநதுவிட முடியும எனறு நினைததேன... அது பைத்தியககாரத் தனமாகப போய்விட்டது..."

சியாமளா தன கண்களைத் துடைத்துக்கொண் டாள. விமமலகளை இருதயததுககுளளேயே புதைததுக் கொணடாள "இனிமேல எனனால வாழவே முடியாது ராஜ...எனனால வாழவே முடியாது...நான வாழ் வதாலும பயனில்லை "

ராஜாவின் மனம மிகவும் இளகிப்போய் விட்டது. தேவதை போனற அழகினை உடைய சியாமளா இரு தயம் ஒடிந்துபோனவளாக அவன் அருகில் உட்காாநது கொணடிருநதாள. அவளுடைய தளிருடல் புயலில் அகப்பட்ட கொடிபோல் நடுஙகிக கொண்டிருநதது. தனக்கு வாழ்வை அளிதத சியாமளாவுக்கு வாழவை அளிகக முயறசிகக வேணடியது அவன கடமையலலவா? சியாமளாவுக்காக அவன எனனதான செய்யக கூடாது?

"எழுநதிரு சியாமளா .." எனறு மெதுவாக அவள் முகத்தைப் பிடித்து உயாதத முயன்றுன. அவனுடைய தொணடை அடைத்துக் கொண்டது. குரல் கரகரத்தது.

ராஜாவின் குரலில் ஒரு மாறுதல் ஏற்பட்டு விட்டதை சியாமளா உணர்நதாள். "எனனை ஏற்றுக் கொள்வீர்களா ராஜா...?"

ராஜாவின் கண்களில் கண்ணீர் நிரம்பி விட்டது. பேச நா எழவில்லை. தலையை மட்டும் அசைத்தான்.

''ராஜா . என் ராஜா ''—சியாமளா கொடிபோல் அவன் உடலைச் சுற்றிப் பின்னிக கொண்டாள.

அதே சமயம்.

'டுமீல...' என்ற பயங்கரமான ஓசை ..

உலகம் ஒரு கணம் ஸ்தமபித்துப்போய் விட்டாற் போல் இருநதது. சியாமளா வீரிட்டு அலறியது கேட்டது. அவளுடைய உடல ராஜாவின கைகளிலே துடித்தது.

''சியாமளா...''

இதயம பிளநது போவதுபோல கத்தியபடி ராஜா அவளைத தன கைகளில எடுதது முகத்தைப பார்ததான.

வேதனையால் அவளுடைய கண்கள சுழனறன. ''ராஜா...'' எனறு கடைசியாக ஒரு வாாத்தை.

''சியாமளா ஐயோ சியாமளா...'' என்று அலறினன் ராஜா ''கணணே சியாமளா இதறகாகவா காதல் பிசசை கேட்டாய...எனனுல வாழநது விடுவேன எனறு சொனனுயே...இபபொழுது இறநது போனுயே...? எப்படியமமா செத்தாய...? சியாமளா...எபபடியமமா எனனை விட்டுவிட்டுப் போனுய ?'' எனறு அலறினன ராஜா.

ராஜாவுக்குப் பைத்தியம் தான் பிடித்துவிட்டிருக்க வேணடும அவன தலை தலையாயப போட்டுககொணடு கதறிக கொணடிருநதான. அநத நேரததில எபபடித் தான ஸ்டெல்லாமேரி அஙகு வநது சோநதாளோ? ராஜா கதறிககொண்டிருபபதையும் சியாமளா இரத்த வெள்ளத்தில் கிடப்பதையும் பார்த்தாள். அவள் மனதில் ஒரே எணணம் தான உண்டாயிற்று. உடனே அவசரம அவசரமாக அருகில இருநத டெலிபோன் பூத்தை நோக்கி ஓடினுள். அந்த நேரததிலும் குயுகதி

படைத்த அவளுடைய மனம் விபரீதமாகத்தான் வேலை செயதது முதலில ரூபராணிககு டெலிபோன பணணி ராஜா சியாமளாவைக கொலை செய்து விட்டதாகக் கூறினள. பிறகுதான் போலீஸுககு டெலிபோன் பணணினள.

முதலில் ராஜாவுக்கு ஒன்றுமே புரியவிலலை எதையுமே புரிநது கொளளககூடிய நிலையில அவன இருக்கவிலலை. ரூபராணி அவனைப பாாத்து ஆவேசததுடன "அடப பாவீ...என மகளை ஏனடா கொலை செயதாய...? ஐயோ பழிகாரா...என மகளைககொனறுவிட்டாயே...?" எனறு கூறி அரறறிய பொழுது ராஜா திகைததுபபோய் நினறு விடடான.

பிறகு அவன் தன் மகளமேல் விழுநது புரணடு தலைதலையாயப போடடுக்கொணடு கதறத தொடஙகி விடடாள. அநதக் காடசி பரிதாபகரமாக இருநதது. போலீஸ வருவதறகுள ரூபராணிககு மூாசசைபோடடு

சிறிது நேரததிறகுள கும்பல கூடிவிட்டது. போலீஸ்காராகள வநது சூழநதுகொணடனா. பிரேதம அப்புறபபடுததபபடடது போலீஸ அதிகாரி ஒருவர் ராஜாவை அழைததுககொண்டு போய விசாரிககத் தொடஙகிஞா. போலீஸ அதிகாரி கேட்ட முதற் கேளவி,

"நீ தான் ராஜபகதூர் சிங்...கொள்ளைக்கூட்டத்தில் இருநது சரணகதி அடைநதவன...?"

ராஜா தலையை அசைத்தான். "ஆமாம்..."

"இதெல்லாம் உன்னைப் போன்றவர்களுக்கு மிகவும் சாதாரணம.. மரணத்தைப் பாாத்து நீஙகள அஞசுவதிலலை. எதிரிகளைச சுட்டுக் கொலவது உஙகளுககு வேடிக்கையாக இருக்கும்..."

ராஜா பதிலே பேசவில்லை.

"கொள்ளைக் கூட்டததில் இருநதபோது நீ எததனை பேரைச் சுடடுக கொன்றிருபபாய...?"

ராஜாவின் கணகளிலிருநது மளமள எனறுகண்ணீா பெருகத தொடஙகி விடடது. உடல நடுஙகிறறு. "நான யாரையுமே சுடடுக கொனறதிலலை. ஒரு காககை குரு வியைக கொலவதறகுக் கூடத துபபாககியை உப யோகப படுததியதிலலை..."

இனஸபெக்டர் அதைப்பற்றி யோசிததாா. கேள் விகளை வேறு விதமாகக் கேடடுப் பாரககலாம எனறு அவருககுத தோனறியிருகக வேணடும. "சியாமளாவுக் காகததான நீ கொள்ளைக கூட்டததை விட்டு விஜேபாஜியிடம சரணுகதி அடைநதாய எனபது உணமையலலவா...?"

"ஆமாம்..."

"சியாமளாவின மேல் நீ அளவு கடநத காதல கொணடு விடடாய கொள்ளைக கூடடததின வாழககை அவளுககு ஏறறதாக இருககாது எனறு நினைததாய. விஜேபாஜியிடம சரணுகதி அடைவதன மூலம சுலப மாக அவளுடைய இதயததைக கவாநது விடலாம எனறு நினைததாய. இலலையா?"

ராஜா அதிாசசியடைநத நிலையில இருந்த போதிலும அவனுககுத தூககிவாரிப போடடது. உணமையை இவவளவு தலைகீழாகத திரிததுக கூற முடியும எனறு அவன கறபனை செயததுகூடக கிடை யாது திகைததுபபோய வாயைப பிளநதபடி இனஸ பெகடா முகததைப பாாத்தான. அதில கரு ணையையோ பசசாத்தாபததையோ காணுத தால தயக்கததுடன், "இலலை...இனஸபெகடர் பிரிட்டிஷ் ஆடசி முடிவடைநது விடடது எனபதைச் சியாமளாதான எனனிடம கூறினள.', விஜேபாஜி வநது கொணடிருககிருர். நான் மனிதனுவதறகு ஒரு

சந்தாப்பம வநது கொண்டிருக்கிறது என்பதைச் சியாமளாதான எனக்குச சொனனுள எனனிடமிருநத மனித உணாசசிகளே அவளதான தூணடிவளர்த்து விட்டாள அது தான உணமை இனஸபெகடா .. சியாமளாவை எனககு வழிகாடடிய ஒளிநடசததிரமாக வும வாழவளிதத தெயவமாகவும கருதுகிறேன இனஸ பெகடா... அவளே நான கொலே செயயவிலலே. இனஸ பெக்டா... கொலே செயய விலலே... எனறு கணணீா பொஙகக கதறினுன.

இனஸபெகடா எனன நினேத்தாரோ, ராஜாவை அழைததுககொணடு போகச சொலலிவிடடு மறற சாட்சிகளே விசாரிககத தொடஙகினுா.

அவசரம அவசரமாகப் படப்பிடிபபை முடித்துக் கொடுத்து விட்டு பமபாயிலிருநது டெலலிககு விமானத்தின மூலம பறநது வநது சோநதாள மாயா. சாஸதிரி டெலலி விமான நிலேயததில காரை வைததுககொணடு நினமுா. இரணடுபேரும விமான நிலேயததிலிருநது தாஙகள தஙக வேணடிய லாட்ஜை நோககிக காரில வநது கொணடிருநதனா.

அவாகள லாடஜை நெருஙகிககொண்டிருநத சமயமதானு குணடு வெடிததாறபோனற சபதம் கேடடது. ஆனுல அதை அவாகள பொருடபடுதத விலலே. சாஸதிரி மாயாவைத திருமபிப பாாததுவிடடுக காரை ஒட்டத தொடஙகிய சமயம ..

குடிகாரன போல ஒரு மனிதன் காருக்கு நேர் எதிராக நடநது வநது கொணடிருநதான. அவன மிகச் சமீபமாக வநது விடடதால சாஸதிரி சடடெனறு பிரேக போடடுக் காரை நிறுததினுா. உடனே, அவன் சாஸதிரியின முகததுககு நேராகத துபபாககியை நீட்டினுன, "ஜாககிரதை சுட்டு விடுவேன..." எனறு இரத்ததததை உறைநது போகச செய்யுமபடியான கடுமையான குரலில கூறிவிட்டு ஒரே பாய்ச்சலாகப் பாய்நது

காருககுள் ஏறி உட்கார்நது கொண்டான். துபபாக்கி யால சாஸதிரியின முதுகில இடிததபடி, "ஓட்டு...வேக மாக ஓட்டு," எனறு காஜிததான.

சாஸதிரி பயநது நடுங்கத் தொடஙகிவிட்டார. மாயாவுககு ஒனறுமே ஓடவிலலே. கார பறநது கொண டிருநதது.

"இடபபககம போ . வலப்பக்கம போ..." எனறு அவனே அதட்டி வழி கூறிககொண்டு வநதான மேலும் மேலும வேகமாகப போகுமபடி வறபுறுததிக கொண டிருநதான மாயா காருககுள இருபபதையும பொருட் படுததாமல சாஸதிரி உயிரைக கையில பிடிததுக் கொணடு காரை முடுககினுர.

நகர எலலேயைத தாண்டி இரணடு மைலதூரம் வநததும அவன காரை நிறுததச சொனனுன. காரிலிருநது துளளிக குதிததுக கீழே இறங்கிக் கொணடு கதவைத தடாலெனறு அடிததுச சாததிவிட்டு, "எனனேப பாாததததை மறநது விடுஙகள...இஙகே கொணடுவநது விட்டதையும மறநது விடுஙகள உஙகள இரணடு பேருக்குமதான சொலகிறேன...அபபடிச் செயயாவிட்டால ... எனனேப பறறி யாரிடமாவது சொனனுல. ராஜபுதன வீராகளுககுத துரோகம செய் தவாகளின பரமபரையே நாசமாகிவிடும எனபதை மறநது விடாதே காளீமாதா உஙகளே ஒழிதது விடுவாள...இரததம இரததமாகக ககிச சாவீர்கள..." எனறு பயஙகரமாகக கூறிவிட்டு ஓடிவிட்டான.

சாஸ்திரி இன்னும நடுஙகிக கொணடு உடகார்ந திருநதார. ஆனுல மாயா அமைதியாகவே இருநதாள. சிறிது நேரததிறகுப பிறகு காரைத திருபபுஙகள் சிததபபா" எனருள.

"மாயா...அவன் முகத்தில் குறுக்காக இருந்த வெட்டுககாயத தழும்பைப பாாததாயா?" எனறு கேட்டார சாஸதிரி.

"பார்த்தேன் சித்தப்பா " என்றாள் மாயா.

"இவன்தான் முன்பு ராஜாவைப் பின்தொடர்ந்து சென்றான். இப்பொழுதும் ராஜாவிடமிருந்துதான் வருகிறான் என்று நினைக்கிறேன்..." என்று நடுங்கியபடி கூறினார் சாஸ்திரி.

"அடாடா நீங்கள் இதை முன்பே சொல்ல வில்லையே ?" என்றாள் மாயா.

"சொல்லியிருந்தால்...?"

"அவனிடமே கேட்டிருப்பேன் "

"என்ன பைத்தியக்காரத்தனமான துணிச்சலடீ உனக்கு...?" என்று கலவரத்துடன் கூறினார் சாஸ்திரி.

நகரத்தின் எல்லையில் இருந்த ஒரு தொழிற்சாலையின் அருகில் மாயா காரை நிறுத்தச் சொன்னாள் அவள் போலீஸுக்கு டெலிபோன் பண்ண விரும்புகிறாள் என்பதைத் தெரிந்து கொண்ட சாஸ்திரி பதறத் துடன், "மாயா வேண்டாம். அந்தக் கொள்ளைக் காரனுடைய சாபத்தை மறந்து விட்டாயா? அந்த மாதிரி மனிதர்களுடைய வாக்குப் பலித்துவிடும்," என்று நடுங்கியபடி கூறினார்.

"சும்மா இருங்கள் சித்தப்பா " என்று கூறிவிட்டுக் காரைவிட்டு இறங்கி வேகமாக உள்ளே போன மாயா தொழிற்சாலையில் இருந்த குமாஸ்தாவிடம் அனுமதி பெற்றுப்போலீஸ்நிலையத்திற்கு டெலிபோன் பண்ணினாள். ராஜபுதனக் கொள்ளைக்காரன் வழிமறித்தது, காரைத் திருப்பி ஓட்டச் சொன்னது அவனுடைய அடையாளம், இறங்கிக் கொண்ட இடம் எல்லாவற்றையும் விரிவாகக் கூறினாள். துப்பாக்கி வெடிக்கும் சப்தம் கேட்டதை மாத்திரம் மறந்து விட்டாள்.

என்ன துரதிருஷ்டம் ..!

## அத்தியாயம் : 22

டெலலிநகரப் போலீஸின கொலை ஆராயசசிப பிரிவு இனஸபெகடருககு எவ்விதமான சநதேகமும் இருககவிலலை — ராஜாதான கொலைகாரன என்ற விஷயததில ..

அவருடைய நோககபபடி ராஜா சியாமளாவைக கொலைசெயதகாரணம காதலில் ஏறபட்ட தகராறு அது எவவிதமான தகராருக இருககும? ராஜாவைபபோனற ஒரு மாஜி கொளளைககாரன பழமையான பழககஙகள உடையவனுக இருநதிருப்பான சியாமளாவைப போனற நவநாகரிகப பெணணின நடததை அவனுககு பலமான சநதேகத்தை உணடாககியிருககும சியாமளா• வால தான ஏமாநது போய விடடதாக நினைதது ஆத்திரம் கொணட ராஜா தன கொளளைககார இயலபுபபடி மூாககாவேசம கொணட நிலையில அவனைக் கொனறு விடடான.

இநத வழககுககு முககியமான போலீஸதரபபு சாட்சி ஸடெலலாமேரிதான ராஜா சியாமளாவின மேல முட்டாளதனமான காதல கொணடிருநததாகவும மனமோகனுககும சியாமளாவுக்கும் இருநத உறவு தெரிநததும அவன ஒரே அடியாக ஆததிரம கொண டிருநததாகவும அநத ஆததிரமே கொலைககுக காரண மாகியிருககலாம எனறும அவள கூறினுள.

கொலை செய்த துபபாககி எஙகே போயிறறு எனபது தெரியவிலலை. ஆனுல் துப்பாககி காணபபட விலலை எனற ஒரே காரணததுககாக இவவளவு நல்ல கொலைக் கேஸை இழநதுவிட அவா விருமபவிலலை. அவருடைய யூகததிறகுத் தகுநதபடியாகக கேஸை ஜோடிதது அதறகுத தகுநதமாதிரி சாட்சியஙகளைத தயாரிபபதில ஈடுபடடிருநதாா.

அதேசமயததில போலீஸ படையின இனனெரு பிரிவு மாயா கூறிய விவரஙகளை வைத்துக கொணடு

ராஜபுதனக் கொள்ளைக்காரனை வெட்டுத்தழும்பு மூஞ்சிககாரனைத தேடிக் கொணடிருநதது மைனாவின காரிலிருநது அவன இறங்கிச சென்ற இடததை மைய மாகக கொண்டு பிரமாணடமான போலீஸ வலை விரிக்கப பட்டிருநதது நாலா பககங்களிலும உள்ள பாதைகள், கிராமங்கள், இரயில நிலையங்கள், பொதுவிடுதிகள எலலாம கணகாணிககபபட்டன. முககியமாக ராஜ புதனததுககுச செலலும மாாககம பூராவும போலீஸ படையால கவனமாகக கண்காணிக்கபபட்டது.

தான டெலிபோனில கூறின விஷயததை நேரில கூறிப புகாா எழுதிக கொடுபபதறகாக மாயா அதே இரவு போலீஸ ஸடேஷனுககு அழைதது வரபபட்டாள. ஆனால அபபோது அதே ஸடேஷனில ராஜா கொலைக் குறறததுககாக விசாரணை செயயபபடுகிறான என்ற விஷயம அவளுககுத தெரியாது

புகாா எழுதிக கொடுததுவிட்டு லாட்ஜுககுத் திருமபியபின, மறுநாள காலையில டூரிஸ்ட கமபெனியில போய ராஜாவைச சநதிபபதாக முடிவுசெயது கொணடு சாஸதிரியும மாயாவும அவரவா அறைககுப படுககச சென்றனர்

மறுநாள காலையில தினபபததிரிகையில பார்த்த பிறகுதான, சியாமளா கொலை செயயப்பட்ட விஷயமும கொள்ளைககூட்டததிலிருநது வநத ராஜபகதூர் சிங கைது செயயபபட்டிருககும விஷயமும மாயாவுக்குத தெரிய வநதன. சியாமளாவின புகைபபடம, ராஜாவின புகைபபடம எலலாம பததிரிகையில போடப பட்டிருநதன மாயாவுககுத திடீரெனறு மூசசே நின்று விடும போல ஆகிவிட்டது. வெறிபிடிததவள போல் ஓடிபபோயச சாஸதிரியின அறைககததவைத தட்டினாள. "சிததபபா இதைப பாருஙகள சிததப்பா," என்று கூறிப பததிரிகையைச சாஸதிரியின கையில் திணித்து விட்டு உயிரிழநதவள போல் பொத்தென்று சோபாவில் விழுநதாள.

சாஸதிரி பத்திரிகையில் வெளிவநதிருந்த விஷயம் பூராவும் படிததாா, உதட்டைப பிதுக்கியபடி

பேப்பரைக் கீழே வைத்துவிட்டு, "இதில நாம என்னமமா செயய முடியும ? கொலேக் குறறம் நடந திருககிறது இபபடி ஏதாவது நடைபெறும என்று எனககு முனபே தெரியும எனககு அநதப பையன மேல ஆரமபததிலிருநதே நலல எணணமிலலே நீ புறபபட்டு வநத வேளே சரியிலலே பேசாமல திருமபிப போய விடுவதுதான நலலது," என்ருா

மாயா கணணீா வடிததாள். "இலலே சிததப்பா . அவா கொலே செயதிருகக மாட்டாா...நான அதை நமபவே மாட்டேன சிததபபா அவரைக காபபாறற ஏதாவது செயயுஙகள சிததபபா இலலாவிட்டால நான உயிருடனேயே இருகக மாட்டேன..." என்று கூறிககொணடு தேமபித தேமபி அழததொடஙகி விட்டாள.

சாஸதிரி சிறிது நேரம் அவளேயே பாாததுககொண டிருநதாா. பிறகு, "சரி அழாதே வா போகலாம நம மால ஏதாவது செயய முடிகிறதா என்று பாாபபோம. எனககென்னவோ நமபிககை இலலே இருநதாலும முயறசி செயது பாாபபோம நீ இவவளவு தூரம அவனமேல பைததியககாரததனமான ஆசை வைத திருககிருயே...? என்ன செயவது...?" என்று கூறிப புறப் பட்டாா.

சாஸதிரியும மாயாவும முதலில டெலலி மாநகரத திலேயே மிகபபெரிய கிரிமினல லாயரான நமபியாரைப பாாததனா நமபியாா அவாகளுடன ராஜாவைப பாாபபதறகாகப போலீஸ ஸடேஷனுககு வநதாா. ராஜாவை அடிதது உதைதது எபபடியாவது அவனிட மிருநது ஒரு ஒபபுதல வாககு மூலம வாஙகிவிட வேண டும என்று நினேததுககொணடிருநத போலீஸ இனஸ பெகடா நமபியாரைப பாாததும வாயைப பிளந தாா.

* * *

"மாயா நீ எதற்காக வநதாய்...?" என்று உடைநத குரலில கேட்டான ராஜா.

அவனைப் பார்த்தவுடன் துயரம் தாங்கமாட்டாமல் கேவி அழுது கொண்டிருநத மாயா, "ஐயோ ராஜா... நான முனபே சொனனதைக் கேட்டீர்களா? கேட்டிருந தால் இபபடிபபட்ட விபரீதம எலலாம ஏறபட்டிருக குமா...?" எனறு கூறித தேம்பித தேம்பி அழுதாள் மாயா.

ராஜாவால் பேச முடியவில்லை. உண்மைதான். அவன ஒரு தொழிலாளியாக வாழவேண்டிய அவசியமே இல்லை எனறு தான மாயா கூறினாள ஆரமபததிலேயே அவனுடைய வாழககையைத திருபபி விட்டுவிட முயனறாள. அவனதான அதைக காதில போட்டுக் கொளளவிலலை அபபொழுது அவன உளளததைப் பிடிததுககொணடிருநத புரட்சியாவேசம வேறுவித மான வாழககையைப பறறிச சிநதிபபதறகே இடமில் லாமல செயது விட்டது.

அனறே தன்னுடைய வாழக்கைப் பாதை திரும்பி வேறு வழியில சென்றிருநதால இபபொழுது எப்படி யிருநதிருககும?

ராஜாவுக்குச சிரிபபுத்தான வநதது. வாழக்கையில் நடநதுவிட்ட எதையும மாறறிககொளள முடியாது அவன இனி வேறு எபபடிபபட்ட ராஜாவாக மாறிய போதிலும வெடிகுணடு வீசிய புரட்சிககார ராஜாவை யும், கொளளைககார ராஜாவையும அவன வாழவிலி ருநது அழிகக முடியாது தான வெடிகுணடு வீசி அவளைக கொலை செய்ய முயனறது மாயாவுக்குத் தெரியுமா? இபபொழுது தனனைக காபபாறறுவதறகாக வநது நிறகிறாளே...

"அழாதே மாயா .அழாதே நீ நினைப்பதை எல் லாம் விட என வாழககை மிகவும விபரீதமானது...மிக மிக விபரீதமாகப போய்விட்ட வாழக்கை மாயா என் னுடையது...எத்தனை பயஙகரமான சம்பவஙகள்...! எததனை திடுக்கிடும நிகழச்சிகள்! அடேயப்பா...ஒரு தனி மனிதனுடைய வாழககையில் இவ்வளவு விபரீதங்

கள் நேரிடவே கூடாது மாயா இப்படிப்பட்ட ஒரு வாழககை இருப்பதே தவறு இத்தனை வேதனைகளையும பயஙகரஙகளையும அனுபவிதத ஒரு மனிதன மறுபடியும சரியான, நிதானமான வாழககை நடதத முயனறாலும முடியுமா எனபதே சநதேகம தான இநத வாழககை அழிநது போவதே நலலது மாயா கடவுளாகப பாாதது நைநது போன இநத வாழககையிலிருநது எனககு விடுதலை யளிபபதறகாகததான இநதக கொலை வழககைக் கொணடுவநது விடடிருககிறாா என்று நினைக் கிறேன நிமமதியாகத தூககில தொஙகிச சாவதறகு என்னை விடடுவிடு மாயா,'' என்று அழுபபுடன கூறினான ராஜா.

''ஐயோ ராஜா... நீஙகள சாகக கூடாது நீஙகள் கொலை செயயவிலலை எனபது எனககு நிசசயமாகத தெரியும... உஙகள மேல சாடடபபடடிருககும இநதக கொலைக குறறததிலிருநது உஙகளை விடுவிபபதறகாகத தான வநதேன... வாருஙகள ராஜா. வககீலிடம எலலா விபரஙகளும சொலலுஙகள ராஜா,'' என்று வறபுறுத தினாள மாயா

வககீல நமபியாா போலீஸ இனஸபெகடரைப் போல் குறுககு விசாரணை செயயத தொடங்காமல ராஜாவிடம சமபவம எபபடி நடநதது எனபதை விளக குமபடிக கேடடாா. பிறகு கொலை நடபபதறகுமுனனால சியாமளாவுக்கும் அவனுக்கும் எபபடிபபடட உறவு இருநதது எனபதை விவரிககும்படிக கேட்டாா. பிறகு சியாமளாவுககும அவனுக்கும எபபடித் தொடாபு ஏற பட்டது எனபதைக கேடடாா

ராஜா அநத வரலாறு முழுவதையும் சொலலும் போதும மாயாவும, சாஸதிரியும அருகிலேயேதான இருநதனா. ஆனால அவாகளுககு, அனறு நடுநிசியில் அவாகளுடைய காரை வழிமறிததுத தபபி ஓடுவதறகு உப யோகபபடுததிககொணடவனதான சியாமளாவைப் பலாதகாரம செயய முயனற முரடடு மானஸிங் எனபது தோனறவே இலலை. இரணடு சமபவஙகளையும ஒனறாக

இணைத்துப் பார்க்கும் எண்ணமே யாருக்கும் அப்பொழுது உண்டாகவில்லை.

ராஜா கூறிய விவரம் முழுவதையும் கேட்டுக் கொண்டபின் நம்பியார் போலீஸ் இன்ஸ்பெக்டரிடமும் சில விவரங்கள் கேட்டார். கொலை செய்ய உபயோகப் படுத்தப்பட்ட ஆயுதம் இன்னும் கிடைக்கவில்லை என்று தெரிந்ததும் நம்பியாருக்கு உற்சாகம் தோன்ற ஆரம்பித்தது.

"ராஜாவின் மேல் குற்றம் சாட்டப் போகிறீர்களா? அல்லது விடுதலை செய்யப் போகிறீர்களா இன்ஸ்பெக்டர்?" என்று கேட்டார் நம்பியார்.

"விட்டு விடுவதா? நாளைக்கே குற்றம் சாட்டிக் கோர்ட்டில் நிறுத்தப் போகிறேன். முதல் தரமான கொலைக் குற்றம். உங்களால் ஜாமீனில் விடுதலை செய்ய முடியாது என்பதை இப்பொழுதே தெரிவித்துக் கொள்கிறேன்," என்றார் இன்ஸ்பெக்டர்.

"அது எனக்குத் தெரியும். குற்றம் சாட்டாமல் நீங்கள் ரிமாண்டிலேயே வைத்துக் கொண்டிருக்கக் கூடாது என்பதற்காகத்தான் சொன்னேன்," என்றார் நம்பியார்.

"இந்தக் கேஸில் சந்தேகத்திற்கு இடமே இல்லை. அதனால் குற்றம் சாட்டாமல் காலம் கடத்தவேண்டிய அவசியமே இல்லை. நீங்கள் குறுக்கிடாமல் இருந்தால் குற்றவாளியே தான் கொலை செய்ததை ஒப்புக்கொண்டிருப்பான் என்று நினைக்கிறேன்," என்றார் இன்ஸ்பெக்டர்.

போலீஸ் ஸ்டேஷனிலிருந்து வெளியே வந்ததும் நம்பியார் சாஸ்திரியையும் மாயாவையும் பார்த்து, "ராஜாவுக்கு அனுகூலமாக ஒரு சாட்சியம் கூட இல்லை. ராஜா கொலை செய்திருப்பான் என்று தோன்றவில்லை யானாலும் சியாமளாவை வேறு யார் எதற்காகக் கொலை செய்தார்கள் என்பது தெரிய வேண்டும். இந்தக் கேஸை

யாராவது ஒரு துப்பறியும் நிபுணரிடம் ஒப்புவிக்க வேண்டியது அவசியம என்று நினைககிறேன்,'' என்றா

மாயாவும உடனே அதறகுச சமமதிததாள. மூவரும நமபியாரின நணபரான துபபறியும நிபுணர் துககாராமின வீட்டை நோககிப புறபபட்டனா.

•லகத்தில் இப்படிப்பட்ட பாதகங்கள் எல்லாம் ...ம் என்று ராஜா கறபனை செயது கூடப் பாாத திருகக மாட்டான ஒரு புரட்சிககாரன வெடிகுணடு வீசபபோவதிலே அாத்தம இருககிறது, கொள்ளைக் காரன் கொள்ளையடிபபதறகும் கொலை செய்வதற்கும் கூடக் காரணம இருககிறது ஆனால...

கோர்ட்டில் ஸ்டெலலாமேரி கூறிய சாட்சியம்...! தனக்கென்று ஒரு லாபமிலலாதபோது கூடப பிறருக்குத தீமை செயவதிலேயே இனபம அடையககூடிய மனிதர் களும இருககிறாா்களா?

ஸடெலலாமேரிக்கு அவன் செய்த கொடுமைதான் என்ன? காமுகாகளோடு உறவாடுவதில உறசாகம் காணும இயலபுபடைதத அவனுடைய கோரிககையைத தான மறுதது விட்டதால உணடான ஆததிரத் தாலேயே அவள் தனனைத் தூககு மேடைக்கு அனுபபத் தீர்மானித்து விட்டாளா...?

கடவுளே !—ராஜா திகைத்துப்போய் நின்று கொண்டிருநதான்.

நம்பியாரின் குறுக்கு விசாரணையை அவள் மிகவும் சாமாத்தியமாகச் சமாளித்தாள மன்மோகன கிருஷ்ணு வின் வீட்டிற்குத் தான் ராஜாவை அழைத்துக்கொணடு போன காரணம ராஜா ஓவியக்கலையில் ஆாவம உடைய வராக இருநததுதான என்று கூறினள். சியாமளாவுக் கும் மன்மோகனுக்கும் இருநத உறவு தெரிநததும் ராஜா அளவு கடநத சீற்றமடைந்த தாகவும், 'வஞ்சகி,

துரோகி என்னையும் கையாலாகாத பட்டணத்து வாலிபன என்று நினைததுககொணடாளா...? நான அவளுககுச சரியான பாடம கறபிககிறேன? என்று காஜிததாகவும, தான அவளைச சமாதானபபடுததி நைட்கிளபபுககு அழைததுககொணடு போனதாகவும கதையளநதாள.

ராஜா திகைத்துப்போய் ஸ்டெல்லாமேரியின் முகத்தையே பாாததுக கொணடிருநதான். தனககுத் தூககு தணடனை நிசசயம் இவாகளிடமிருநது தனனால் தபபவே முடியாது எனறுதான அவனுககுத தோனறிக கொணடிருநதது.

ஆனால், விதி ராஜாவின கழுத்துக்காகச சுருக்குக் கயிறு தயாரிததுக கொணடிருநத அதே நேரததில, இன்னொரு பககம அதறகு எதிராகவும வேலைசெய்து கொண் டிருநதது.

ராஜா கைது செய்யபபட்டபின ஒரு வாரத்திறகுப் பின்னால முரடன மானஸிங ராஜபுதனததிறகுச சமீபத் தில உளள ஒரு கிராமததில சுடடுக கொலலபபடடான. மாயா கொடுதத வாககு மூலமதான அவனைக கொல் வதறகு உதவியாக இருநததால போலீஸ அதிகாரி அவளைப பாராட்டுவதறகு வநதிருநதாா மாயாவுககு ரொககப பரிசுகூடக கிடைககும எனறு அவா கூறினா.

அப்பொழுது துப்பறியும் நிபுணர் துக்காராமும் அவர்களுடன இருநதார். சுட்டுக் கொல்லபபட்ட கொளளைக்காரன் பெயா மானஸிங் எனபது அவர் நினைவில உறுத்தத் தொடங்கிற்று. போலீஸ அதிகாரி சென றபின், "பாலைவனத்தில் சியாமளாவைப் பலாத் காரம செய்ய முயனற கொளளைக்காரன பெயரும் மானஸிங் தானே?" என்று கேட்டார்.

திடீரெனறு உணமைகள புலபபடத் தொடங்கின. கொள்ளைககாரன தஙகளுடைய காரை வழி மறிப் பதற்கு முனனால் துபபாககி வெடிக்கும் சபதம் கேட்டது மாயாவுககு நினைவு வநதது. கொளளைக்காரன் மாயா

வின் காரை வழிமறித்த இடத்திற்கும் சியாமளா கொலை செய்யபபட்ட இடததிறகும இடையில குறுககு வழி யாகப போனுல இரணடு மதிற சுவாகளும அரை பர் லாங்கு தூரமும தான இருககினறன எனற உணமை வெளிபபடடது. ராஜாவை மறுபடியும விசாரிததபோது மானசிங தஙகளைப பழிவாஙகச சபதம செயது கொண் டிருநதான எனபது தெரிநதது கொலை நடபபதறகு முதல நாள இரவே மானசிங சியாமளாவையும ராஜாவையும பின தொடாநது சென்றது சாஸதிரிககும நினைவு வநதது

கடைசியாக, சியாமளாவின உடலிலிருநது எடுககப் பட்ட துபபாககி ரவை மானசிஙகின துபபாககியிலிருநது தான சுடபபடடிருகக வேணடும எனபது சநதேகததிற கிடமிலலாமல நிருபிககபபடடது.

கொலை வழககு செஷனஸுககு அனுபபபபடுவதறகு முனனுல ஏறபடட இநதத திடீா திருபபததால ராஜா எதிாபாராதவிதமாக விடுதலை செயயபபடடான

## அத்தியாயம் : 23

ராஜா விடுதலையடைநத போது மாயாவுக்கு உண் டான ஆனநததததைச சொலலவே முடியாது. இனி அவன அவளுடையவளதான. தனனிடமிருநது அவனை யாருமே தட்டிப பறிததுககொளள விடவே மாடடாள. அவனுக்காக அவள தனனுடைய வாழவையே பணைய மாககி விட்டாள. செலவமும சுகமும இருநதும தன னுடைய இளமைப பருவததையே வீணுககிககொணடு அவனுககாகவே கனனிபபெணணுகக காததுக கொணடி ருநதாள அவன இனித தனனை விடடுப போகவே கூடாது போகவே முடியாது மெயமறநது போகுமபடி யான இனப நினைவுகளுடன மாயா அவனை வரவேற்றுத தனனுடைய அறைககு அழைததுககொணடு போனுள,

"ஐயோ... எவ்வளவு இளைத்துப் போய் விட்டீர்கள்? சிறைவாசம் உங்களை எவ்வளவு மெலிந்துபோகச் செய்து விட்டது...? நீங்கள் சில நாள் ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டும் ராஜா காஷ்மீருக்குப் போகலாமா...? எனக்கு வெகு நாட்களாகக் காஷ்மீருக்குப் போக வேண்டும் என்று ஆசை " என்று கிளிபோல கொஞ்சினாள் மாயா.

காஷ்மீர வேண்டாம் முன்பின் தெரியாத இடத்தில போய்க் கஷ்டப்படுவீர்கள் ஸிமலா நல்ல இடம். அங்கே என்னுடைய நண்பன் அலெக்ஸாண்டா இருக்கிறான் உங்களுக்கு வேண்டிய வசதி எல்லாம் செய்து கொடுப்பான் ஸிமலா வசிப்பதற்கு இதமான சுகமான இடம் " நீங்கள் இரண்டுபேரும் ஒரு வாரமோ மாதமோ ஸிமலாவில உல்லாசமாக இருந்து விட்டுத் திரும்பி வாருங்கள். நான் பம்பாய் போகிறேன்," என்றா சாஸ்திரி.

கொள்ளைக்காராகளிடமிருந்து விஞோபாஜியிடம் சரணுகதி அடையும்போது என்ன நிலையில இருந்தானே அதே நிலையில இருந்தான ராஜா அதே திக்கற்ற நிலை. எங்கே போவது என்றுதெரியாத நிலை மாயா இவ்வளவு ஆசைப்படுகிறுளே அவளுடன ஒரு வாரம் ஸிமலாவுக்குப் போய்விட்டுத்தான் வருவோமே...? மாதக் கணக்காக அவளோடு உண்டும் உறங்கியும் சுற்றிக்கொண்டு திரியவில்லையா? அப்போதெல்லாம் உண்டாகி விடாத கெடுதல் இப்பொழுது என்ன ஏற்பட்டு விடப் போகிறது ?

ராஜா மாயாவுடன ஸிமலாவுக்குப் புறப்பட்டான்.

மாயா எல்லையற்ற உற்சாகத்தில மிதந்து கொண்டிருந்தாள ராஜாவுக்காக ஆடைகளும ஸ்வெட்டாகளும குல்லாய்களும ஓடி ஓடி வாங்கினுள இரண்டு பேரும் அன்றிரவு புறப்பட்ட விமானத்தில டில்லிக்குப் போயச் சோநதனா சாஸ்திரி ட்ரங்க்காலபேசி ஏற்பாடு செய்திருந்தபடி அலெக்ஸாண்டா விமான நிலையத்திற்கு வந்து காத்துக்கொண்டிருந்தாா. மாயாவும் ராஜாவும

தங்குவதற்காக ஒரு சிறிய பங்களா, வெளியே போக வர உதவியாக அழகான திறநத கார, பணியாடகள எலலா ஏறபாடுகளும செயது வைததிருநதார. அவாகளைப் பஙகளாவில கொணடு வநது சோததபின, "சரி... நீஙகள சிறிது நேரம தூஙகுஙகள... காலையில வநது சநதிக கிறேன" என்று கூறி விடைபெறறுக கொண்டார.

அநதப பஙகளாவில ஒரே படுககையறைதான் இருநதது. அதில ஒரே ஒரு பெரிய கட்டிலதான போடப பட்டிருநதது

"நீ கட்டிலில படுத்துககொள மாயா... நான ஹாலில சோபாவில படுததுக கொள்கிறேன," என்றான ராஜா

மாயா திகைத்துப்போய் அவன முகததைப் பார்த் தாள அவளுடைய இருதயததில துயரம பொஙகிறறு கண்களில கணணீர பொஙகி விடுமபோல இருநதது. "ஏன...? இதறகு முனனால நீஙகள என அருகில படுததுத் தூஙகினதே இலலையா? எததனை நாள நாம இரணடு பேரும ரயிலவே பளாட்பாரஙகளிலும மரததடிகளிலும ஒனறாகப படுததுத தூஙகியிருககிறோம..." என்றாள மாயா.

ராஜாவால பதில சொலல முடியவிலலை கணநேரம் தடுமாறிய பின, "அது அநதக காலததில சரியாக இருந தது மாயா... இநதக காலததில .. நீ பெரிய சினிமா நட்சததிரம !" என்று கூறிவிட்டுச சோபாவில நீட்டிப் படுத்துககொணடு கொட்டாவி விட்டான

மாயா படுககையில பொததென்று விழுநதாள. அவளுககு விமமி விமமி அழவேணடுமபோல இருநதது. அதைவிட வெளிபபடையாக ஒரு பெணணால எபபடிக கேட்க முடியும ? ராஜாவுககுத தனமேல காதலே இலலையா? அவனுககாகத தான வருஷக் கணக்காகத் தவம் செய்து கொணடிருப்பதெலலாம வீணா? தன் வாழககை அடியோடு வீணாகவே போய்விட வேணடியது தானா? அபபொழுதே ராஜாவிடம் இரணடிலொனறு கேட்டு விடவேணடும் என்று அவளுடைய உளளம்

துடித்தது. ஆனல் ராஜா தனனை மணநது கொளள முடியாது எனறு சொலலிவிடடால...?

அதறகுப் பிறகு தனனல உயிரோடு வாழவே முடியாது எனறு மாயாவுககுத தோனறிறறு அவனமேல அவள கொணட காதல...! நாள கணககாக மாதக கணககாக வருஷக கணககாகத் தன இதயததுளளேயே வைதது வளாதத காதல! அதை .விஞடி நேரததிறகுள் ஏமாறறமடையச செயதுவிடக கூடாது அபபடி ஒரு ஏமாறறம ஏறபடடால அதைத தனனல தாஙகிக கொளளவே முடியாது

மாயா விடிய விடியத தூஙகவே இலலை தலையணையில முகததைப புதைததுககொணடு விமமி விமமியழுது கொணடே கிடநதாள.

ஆனல, மறுநாள காலையில ஒனறும நடவாதது போலவே எழுநது குளிதது உடை தரிநதுககொணடு சிறறுணடி சாபபிடுவதறகாக அவள கீழே வநதாள. ராஜாவும குளிததுவிடடுத தயாராக இருநதான. இரணடு பேரும காரை எடுததுககொணடு நகரைச சுறறிப பாாபபதறகாபப புறபபடடனா

பனிபடிநத மலைச சிகரஙகளின தோறறம அறபுதமாக இருநதது பனிமலையின மடியிலே அழகிய மரஙகளும செடிகளும நிரமபிய நகரம சொாககலோகம போல விளஙகியது இரணடு பேரும ஆனநதமாகச சுறறித திரிநதனா. முதல நாள இரவு அனுபவிதத துனபம கூட மாயாவின மனதிலிருநது மறைநது போயிறறு. பூநதோடடஙகளில உலவுவதிலும மலைப பாறைகளில ஏறுவதிலும ஒரு நாள எபபடிப போயிற றெனபதே தெரியவிலலை இரணடு பேரும மததியானம ஒரு உணவு வ்டுதியில சாபபிடடனா. இடை இடையே தேநீரோ, சிறறுணடியோ, எது வேணடுமானலும கண்ணில கணட இடததில வாஙகிககொணடனா. வாழககை பூராவும இபபடியே உறசாகமாக இருநதால எவவளவு நனருக இருககும எனறுகூட நினைககத தொடஙகி விடடாள மாயா.

இரவு இரண்டு பேரும் ஒரு சினிமாப பாாத்து விட்டுப பஙகளாவுககு வநது சோநததும், மறுபடியும பிரசனை ஆரமபமாகி விட்டது.

பகல பூராவும் சுறறியலைநது கொண்டிருநததால ஏறபட்டிருநத களைபபில சோபாவில படுததவுடன உறஙகிப போயவிட்ட ராஜா நடுநிசியில விழிததுக கொணடு பாாததபோது படுககையறையில விளககு எரிநதது மாயா மூட்டைக் கட்டிககொணடுஉட்காா நது கொணடிருநதாள. அவள சிநதனையில ஆழநது போயி ருபபது தெரிநதது.

"ஏன மாயா உறககம வரவிலலையா?"

"இலலை ராஜா..."—மாயா உடமபை நெளிததுக கொட்டாவி விட்டாள.

"ஐயோ பாவம...படுததுககொணடு தூஙக முயறசி செய உட்காாநது யோசனை செயது கொணடால தூககம வராது..." எனறு கூறிவிட்டு ராஜா திருமபிப படுததுக கொணடான

மறுபடியும மாயா உடகாாநது கொணடே இருந தாள.

"சிறிது நேரததுககுபபின ராஜா தலையைத தூககிப பாாததான "ஏன மாயா? உன மனதை எனன துனபம வதைககிறது?"

"ராஜா..."

"எனன?"

"எனமேல உஙகளுககுச சிறிது கூட ஆசை இல்லையா?"—விமமலை அடககிக்கொணடு கேட்டாள மாயா.

ராஜா எழுநது உட்கார்நதுவிட்டான. இபபொழுது அவனுககு விஷயம விளஙகி விட்டது

"மாயா..."

"என்ன ராஜா..."

"நீ என்னை உண்மையாகக் காதலிக்கிருயா...?"

"பத்து வருஷங்களாக என்னுடைய உயிரை உருக்கி வார்த்து உங்கள்மேல் கொண்ட காதல் பயிரைவளர்த்து வருகிறேன்..."

ராஜா நீண்ட பெருமூச்சுவிட்டான் "என்ன பைத் தியக்காரத் தனம்!" என்ற வார்த்தைகள் அவனையும் அறியாமல் வெளிப்பட்டன

"ஏன் ராஜா "

"சினிமா நடிகைகள் உண்மையாக யாரையும் காதலிப்பதே இல்லை என்று கேள்விப்பட்டிருந்தேன்..."

"அதுவும் உண்மைதான் ராஜா ஆனால் நான் அதற்கு விதிவிலக்கு..."

"அடப்பாவமே ."

ராஜா எழுந்து பைத்தியம் பிடித்தவன்போல் குறுக்கும் நெடுக்கும் நடக்கத் தொடங்கி விட்டான்.

மாயா அப்படியே உட்கார்ந்து கொண்டிருந்தாள்.
சிறிது நேரத்திற்குப்பின் ராஜா மறுபடியும் கேட்டான் "மாயா...சியாமளா எதனால் மரணமடைந்தாள் தெரியுமா...?"

கொள்ளைக்காரன் மான்சிங் அவள்மேல் ஆசை கொண்டிருந்தான் அவள் உங்களோடு வந்து விட்ட தால் கோபாவேசம் கொண்டு பின்தொடர்ந்து வந்து அவளைச் சுட்டுக்கொன்று விட்டான் " என்ருள் மாயா.

"இல்லை மாயா உலகம் அப்படித்தான் நினைக்கும் என்பது எனக்குத் தெரியும். ஆனால் அது உண்மை அல்ல," என்ருன் ராஜா.

"பின் எது உண்மை? நீங்கள் அவளைச் சுட்டுக் கொன்று விட்டீர்கள் என்பதா?"

"இல்லை மாயா சியாமளா என்னைக் காதலித்தாள. என்னுடைய காதலைப பெருவிட்டால வாழவே முடியாது என்றுள அது தான அவள அகால மரணமடைந ததறகுக காரணம..."

மாயா சிரிததாள "என்ன பைததியககாரததன மான பேசசு ராஜா இது ?" என்றுள

"இலலை மாயா...இநதத துரதிரஷடம பிடித்த வனுடைய தலைமேல ஏதோ ஒரு சாபககேடு இருக கிறது...என்னை நெருஙகுகிற யாருமே சநதோஷமாக இருகக முடியாது வாழககையை அனுபவிகக முடியாது உயிரோடு இருககக் கூட முடியாது என்றுல பாாததுக கொளளேன...

"மாயா...ஒரு மனிதன என்று இருநதால அவனைப பெறறேோ, உறறுா, உறவினாகள, நணபாகள, தெரிநத வாகள என்றெலலாம அவனைச சுறறிலும ஒரு உலகமே இருககுமலலவா? ஆனுல என்னைப பாா...நான தனி மனிதன. எனககென்று யாருமே இலலை மாயா உலகத திலிருநது செலுததபபடட ஸபுடனிக செயறகைககோள போல...நான உலகததைச சோநதவனும அலல விண வெளியைச சோநதவனும அலல இரணடிலும சேராமல இரணடிலும கொஞசம கொஞசம ஒட்டிக கொணடிருககும ஒருவிசிததிரமான பிராணி இபபடியே தனியாகச சுறறிக கொணடிருநது எஙகாவது விழுநது மடிய வேணடியது தான என

ராஜா மூசசு விடுவதறகாகக கொஞசம நிறுத தினுன உடனே மாயா கூறினுள "பரவாயிலலை என னுடைய வாழககையும அபபடிபபட்டது தான இரணடு பேரும யாருமே இலலாத அனுதைகளாக உலகததைச சுறறிக கொணடிருபபோம," என்றுள

"இலலை மாயா. அது முடியாது," என்றுன ராஜா. "ஒரு ஆண பிளளையாலதான அபபடி வாழ முடியும. பெணணுல முடியாது. பெண மரததின படடை போன்ற வள. மரததோடு ஒட்டிககொணடே இருக்கும. பட்டை

ரின தனமை அவளுக்கும் பொருநதும். ஆனுல் ஆண் நுளிாத்து முதிாநது பழுதது உதிாநது விடும இலலையப ிபானறவன அவன மரததில ஒடடுவதிலலை...

"ஏனே கடவுள் எனனை இபபடிபபடைதது விட் டார் இனிமேல் எனனுல எதிலும ஒடட முடியாது மாயா..."

"நீஙகள உஙகளை மறநது பேசுகிறீாகள ராஜா . உஙகளுடைய தநதையைககூடவா மறநது விட்டீாகள?" எனருள மாயா

ராஜாவின முகம திடீரெனறு இறுகிப பாறைபோல் ஆகி விடடது அவனுல பேச முடியவிலலை அநதச சந தாபபததை மாயா நழுவவிட விருமபவிலலை. 'உங களுடைய தநதைககாக நீஙகள வாழவேணடும உலகத் தோடு ஒடடின நலல வாழககை வாழவேணடும நீஙகள தொழிலாளியாக இருநது எனனேடு வர முயறசித்த போதே நான உஙகளுடைய தநதைககுக கடிதம எழுதி னேன அவராலதான உஙகளுடைய வாழககைப் பாதையை மாறற முடியும எனறு நினைததேன அவா வரவே இலலையா? உஙகளமேல அவா உயிரையே வைததிருபபதாகச சொனனீாகளே? அபபடிபபடடவர் உஙகளுடைய விலாசம கிடைதத பினபும வரவே இலலையா? ஆசசரியமாகததான இருககிறது", எனருள மாயா.

ராஜாவின கண்களிலிருநது மளமள என்று கண்ணீர் பெருகத தொடஙகி விடடது. "மாயா...நீயா என தநதைககுக கடிதம எழுதி நான பமபாயில இருபபது பறறித தெரிவிததாய?" எனறு கததினுன.

"ஆமாம. ஏன் ?"

"கொலைகாரி...என தந்தையைக கொன்று விடடாயே...?" எனறு அலறினுன ராஜா.

மாயாவுக்கு ஒன்றும் புரியவில்லை. "உங்களுடைய தநதையை நான கொலை செயதேனு...? எனககு ஒனறும் புரியவிலலையே?" எனறுள.

"நான உனமேல் வெடிகுணடு வீசினதாவது தெரியுமா?"

"தெரியும .."

ராஜா திடுககிட்டுப்போய் அவளைப் பார்த்தான். "தெரிநதுமா எனனைக காதலிததேன எனறுய்?"

மாயாவின கணகளில கணணீா கசிநதது "ஆமாம ராஜா ஒரு பெணணின உளளம ஒருவனைக காதலிககத் தொடஙகி விடடால அவன எனன கொடுமை செய தாலும சகிததுக கொளகிறது உஙகள கையால மரண மடைநதாலும அடைவேனே தவிர உஙகளமேல கொணட காதலைத தியாகம செயய மாடடேன..."

ராஜா சிறிதுநேரம வாயடைததுப போய மௌன மாக உடகாாநது விடடான பிறகு, "நான வெடிகுணடு வீசின மறுநாள நான வசிதத தொழிலாளா பிரதே சததில நடநத கலவரததில, போலீஸாா நடததிய தடியடிப பிரயோகததில எனனுடைய தநதை கொலலப படடாா. அவா எனனைத தேடிககொணடு பமபாயககு வராமல இருநதால அவருககு அநதக கதி நோந திராது " எனறுன ராஜா.

"ஓ... அதுதான நான செய்த தவறு? அதனுலதான் உஙகளுடைய தநதை எனனுல் மரணமடைநதாா எனறு கூறுகிறீாகளா? அதைவிட நீஙகள வெடிகுணடு வீசப போகாமல இருநதால அநதக கலவரமே நடநதிருக காதலலவா? நீஙகள பலாதகாரமாகப பிற மனிதாகளைக் கொலை செயயப போன குறறததினுலதானே உஙகளு டைய தநதை பலியாக நோநதது...?"

"ஆமாம மாயா...ஆமாம...அநத எணணமதான் எனனைச சித்ரவதை செயது கொணடே இருககிறது. நான எததகைய பாவி எனபதைப் புரிநது கொணடா யலலவா மாயா...? என வாழககையில எநத நனமை யுமே ஏறபட முடியாது. எனனுடைய நிழலபட்டால்

கூட மறறவாகளுககும துன்பம்தான் உண்டாகும். பாவம...நான சிலநாள தஙக இடம கொடுத்த குறறத்தால எனனைப பெறற மகனபோல கருதிய ரூபராணி தன மகளை இழநது தவிததுக கொணடிருககிறுள... எனனைக காதலிதத ஒரே குறறத்தால சியாமளா அநியாயமாக உயிா துறநதாள...அபபபபா ஒரு மனிதனுடைய வாழககையில இபபடிபபட்ட துர்ச் சமபவஙகள நடைபெறுவதே இலலை மாயா. விதி எனககாக இனனும எனனவெலலாம வைததுக கொண டிருககிறதோ எனறு நினைததாலே என இதயமே பிளநது போகுமபோல இருககிறது மாயா

''ஒரு மனித ஜெனமததில நடகக முடியாத சமபவஙகள, அனுபவிகக முடியாத வேதனைகள எலலா வறறையும நான பட்டுச சகிதது விட்டேன மாயா. எனனுடைய வாழககையிலேயே கவலையே இலலாத காலம நாடோடியாக உனனேடு திரிநத சிலநாடகள தான அநத நாடகளை நான மறககவே முடியாது. உனனையும நான மறககவே முடியாது மாயா அததோடு எனனை விட்டுவிடு இனறைககு நீ அடைந துளள புகழும ஆடமபரமும நிறைநத நலல வாழக கையை எனனல இழநது விடாதே எனனை மறநதுவிடு மாயா...மறநதுவிடு...''

ராஜா அழாககுறையாகக கெஞ்சினன. ஆனல் மாயா அவன வேணடுகோளை ஏறறுக கொளளவிலலை. ''இநதச செலவம ஆடமபரம எலலாவறறையும உதறி விடுகிறேன. மறுபடியும உஙகளோடு நாடோடியாகச் சுறறுவதறகும கூடத தயாராக இருககிறேன...எனனை விட்டுப பிரிநதுபோய விடலாம எனறு மாத்திரம நினைககாதீாகள,'' என்ருள.

மாயாவும அழுது கொண்டிருநதாள ராஜாவும் அழுது கொணடிருநதான, இரணடு பேரும் எப்பொழுது எபபடிக் கணமூடித தூஙகினாகள எனபதே தெரியாது. மாயா மறுபடியும கண்விழித்துப பாாத்தபோது பொழுது நனருக விடிநது விட்டது.

ராஜாவைக் காணேம.

# நான்காம் பாகம்

## அத்தியாயம் · 24

மாயாவின கைபபையிலிருநது டில்லிககுப போவ தறகான வழிச செலவுககு மட்டும ராஜா பணததை எடுததுக கொணடு புறபபட்டு விட்டான அவனுடைய மனதில எலலை மீறிய ஒரு அலுபபு ஏறபட்டு விட்டிருந தது அவனுககும முபபது வயதுககு மேலாகி விட்டது. இனியும எததனை காலம நிலையிலலாமல அலைநது கொணடிருபபது?

போதுமபபா இநத வாழககை...'

"முதலில டிலலிககுப போயச சோவது, அஙகே ஏதாவது வேலை கிடைககுமா எனறு பாாபபது வேலை கிடைத்தாலும கிடைககாவிட்டாலும எபபடியாவது கொஞசம பணம சமபாதிததுக கொணடு சென்னைககுப போய விடுவது" எனறு எணணினுன.

முதலில சுசீலா எனன ஆனுள எனபதைப பாாததுத தெரிநது கொளள வேணடும பிறகு தான எலலாம.

இநத உலகததில இனி அவனுககிருநத ஒரே பறறுதல சுசீலா தான. எததனையோ பேரை வாழககையில சநதிககிறேம ஆனுல யாரோ ஒருவா தான மனதில இடம பிடிதது அஙகேயே வீறறிருகக முடிகிறது ராஜாவின வாழககையில அபபடி இடம பிடிதது வீறறிருபபவள சுசீலா ஒருததி தான. அது மட்டுமலல. அவனுடைய வாழககையில முதன முதலாக மாறுதல ஏறபட்டதே அவளால தான.

இததனை காலமாக ஒரு நாள கூட அவன் சுசீலாவை நினைககாமல இருநததே இலலை. மாயாவோ

சியாமளாவோ யாருமே அவனுடைய இருதயத்தை நெருஙக முடியாமல இருந்ததறகுக காரணமே சுசீலா தான வாழககைப புயல அவனை எஙகெஙகோ அடிததுத தளளிக கொண்டு போய விட்ட போதிலும், அவன எபபடி எபபடியோ வாழநது கொணடிருநத போதிலும அவனுடைய மனதில சுசீலா மட்டும பசுமை யாக நிரமபி நினறு கொணடே இருநதாள.

பலவீனமான உணாசசிகளுககு அவன் இடம் கொடுததது‌ணடு தான செனனைககுத திருமபிப போய சுசீலாவை மணநது கொளள வேண்டும எனற எணணமே இலலாமல திரிநத துணடு ஆயினும அவன எபபொழுதுமே சுசீலாவை மறநததிலலை.

சுசீலா அசைகக முடியாத உறுதி படைத்தவள். அவள கொணட உறுதியிலிருநது யாராலும அவளை மாறறவே முடியாது ஆனால ?

நான சுசீலாவை விட்டு வநது எத்தனையோ வருஷங் கள் கடநது விட்டன இநத இடைக காலததில அவளு டைய வாழககையில என்ன மாறுதல வேணடுமானாலும் ஏறபட்டிருககலாம அதைதத தான எதிா பாாககத் தான வேணடும ஆயினும ஒரு தடவை நேரில பாாததது அவள எபபடியிருககிறாள எனபதைதத தெரிநது கொளள வேணடும அதன பிறகு தான தனனுடைய வாழககையைப பறறி ஏதாவது முடிவு செயய வேணடும எனறு நினைததான ராஜா.

டிலலி மாநகருககு வநது சோநத பினனல் ராஜா வுககு எனன செயவதெனறு தெரியவிலலை வாழககையை நடததிச செலவதறகுத தேவையான ஊதியம எபபடிக் கிடைககும? ஒரு இடததில எபபடி வேலைககுச சோவது? வேலைககு ஆள தேவை எனறு எழுதி வைததிருபபார் களா? இலலா விட்டால எபபடிப போய் விசாரிபபது? குழபபததில ஆழநதபடி ராஜா சுறறிச சுறறி வநது கொணடிருநதான.

பார்லிமெண்டு கட்டிடம,செங்கோட்டை,கான்னட் சர்க்கஸ, கடை வீதிகள்... முனபு அதே இடஙகளைச்

சியாமளாவுடன் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்த போது உண்டான உணாசசிகள அவன மனதில தோனறிச சிதரவதை செயதன சியாமளா திடீரென்று மரண மடைநது விட்டதைப் பறறி நினைதத போது அவன மனம சொலல வொணணுத வேதனையடைநதது. என்ன கொடுமை? சில சமயஙகளில வாழகனக எபபடி யெலலாம விபரீதமாகப் போய விடுகிறது?

நீணட பெருமூசசுவிட்டபடி ராஜா மறுபடியும் நடக்கத் தொடஙகினுன நடநத தெருககளிலேயே திருமபத் திருமப நடநது கொணடிருபபதுகூட அவனுககு அலுப பாகத தோனறவிலலை. இபபடியே தெருககளிலேயே காலம கழிதது விட முடியுமா? சாபபாட்டிறகு என்ன செயவது...?

திடீரெனறு யாரோ ராஜா, ராஜா என்று அவனைப் பெயா சொலலி அழைககும குரல கேட்டது. ராஜா திருமபிப பாாததான அவனுககுத தெரிநத யாரையும காணேம. யாரோ இரணடு சிபபாயகள தான வநது கொணடிருநதனா. ராஜா மறுபடியும திருமபி நடகக முயனற போது, "ராஜா உனனைத தான கூபபிடு கிறேன." என்று கைதட்டிக் கூபபிட்டான ஒரு சிபபாய.

பழகிய குரல...! எங்கேயோ கேட்ட குரல் மாதிரி இருநதது.

ராஜா திடுககிட்டுப் போய் நினருன. சிப்பாய் உடையில இருநதவன பழைய புரட்சிககாரன வெங்கையா எனபது பிறகு தான ராஜாவுககுத தெரிநதது. "அடடே வெஙகையா..." என்று ஆசசரியததுடன கூவினுன ராஜா. வெஙகையா அவனைக் கட்டிக கொண டான.

"ராஜா நீ பலே கெட்டிக் காரன இது வரை நீ போலீஸில அகபபடவே இலலையே? சபாஷ் ராஜா... இபபொழுது என்ன செயகிருய? எஙகே இருககிருய?" என்று ஆாவததுடன கேளவிகளை அடுககினுன வெங கையா.

"உன்னைச் சந்தித்ததில் மிகவும் மகிழ்ச்சி வெங்கையா. எபபோபபட்ட சநதிப்பு இது? மறுபடியும் இநத ஜன்மததில் உனனைப் பார்கக முடியாது எனறே நினைத்துக கொண்டிருநதேன ..." எனறு உணாசசியுடன கூறினன ராஜா.

வெஙகையா மறுபடியும் ராஜா அப்பொழுது எனன செயது கொணடிருககிறன எனபதைப் பற்றியே விசாரிததான

"எனனுடைய நிலைமையைப பற்றி எனனத்தைச் சொலவது வெஙகையா இனறைககுத தான டெல்லிககு வநதேன தஙகுவதறகு இடமும கிடையாது. கையில பணமும கிடையாது. எஙகாவது வேலை கிடைக்குமா எனறு சுறறியலைநது கொணடிருககிறேன. நீ உன்னுடைய கதையைச சொல போலீஸாா உனனைக் கைது செயத பினனல எனன நோநதது? நீ எபபடி ராணு வததில சோநதாய...? என கதையை விட உன கதை சுவாரசியமாக இருககும போலிருககிறது. சொலலு வெஙகையா", எனறன ராஜா.

ராஜாவின நிலைமைக்காக வெஙகையா அனுதாபப் பட்டான. "எனனைக கைது செயது கொணடு போய் வழககுப போடடாாகள. நொணடிககையன சமபுதான் நமமுடைய பலாதகார இயககததைப பறறிச் சொலலி விட்டான எனறல்லவா நினைததோம அவன ஒனறுமே சொலல விலலை போலீஸ காராாகள நெஞசின மேல ஐஸ கட்டியை வைததிருககிறாாகள. அவனுடைய ஒறறைக கை விரலில எணணெயத் துணியைச சுறறி நெருபபு வைததிருககிறாாகள. கண இமைகளின ரோமங்களை எலலாம பிடுஙகியிருககிறாாகள. பிரிட்டிஷ போலீஸ காராாகள அவவளவு கொடுமை செயத போதிலும் அவன் ஒரு வாா்ததை கூடக கூறவிலலை. சமபு ஒரு பெரிய தியாகி. மகா வீரன எனறு சொலல வேணடும. இபபொழுது அவன பமபாயில ஒரு சினிமா ஸடுடியோவில வாடச மேனக வேலைபாாககிறன. ஆனல பாவம் அவன் பழைய சம்புவாக இல்லை. கிழவன போலாகி

விட்டான். கிறுக்குப் பிடித்தவன் போல் ஏதோ ஒரு தினுசாக வாழக்கையை ஓட்டிக கொணடிருக்கிறுன் நம் முடைய இயககத்தைக காட்டிக கொடுததவன தேநீர்க் கடைக்காரன நமபியார. அவன பெரிய புரட்சிக் காரன என்று நாம நமபிக கொணடிருநதோம். இயக் கத்தில சோததுக கொளளாவிட்டாலும அவன எதிரி லேயே நம்முடைய ஆடகள கூட்டஙகளுக்குப போவதும் வருவதும உணடு. எத்தனையோ தடவை அவன நமககுத் தேநீா போட்டுக் கொடுததிருககிறுன. அவன தான நம முடைய ஆட்கள எலலோரையும காட்டிக கொடுதது விடடான்," என்றுன வெஙகையா

"பரவாயிலலை இபபொழுது பயஙகர இயககம் எனறு ஒனறு இலலையே அது நலலதாகப போயிறறு. சமபு வாடச மேஞக இருககிறுன நீ ராணுவததில் சோநது விடடாய பகதசிங என்ன செயகிறுா...?" எனறு கேடடான ராஜா

"பகத்சிங தொழிலாளர்களுக்கு ஏலசசீடடு நடத்தி இபபொழுது கோடீஸவரனுகி விடடான ஷோ மாராக கெட்டிலும இபபொழுது அவனதான பெரிய புளளி. அவன அமெரிககாவுககுப போகப போகிறுன எனறு சொலலிக கொணடாாகள. போய விடடானே என்ன வோ தெரியாது."

ராஜா திடுககிட்டுப் போனுன. "என்னது...பகத் சிஙகுககுத் தணடனையே கிடைககவிலலையா...? பயஙகர இயககததுககும தனக்கும சமபநதமே இலலை எனறு மறுத்து விடடானு?" எனறு ஆததிரத்துடன கேட்டான.

வெங்கையா இடிஇடி யென்று சிரிததான். "இல்லை ராஜா. நமமுடைய பயஙகர இயககததைத் சோநத இளைஞாகளில இதுவரை போலீஸாா கையில அகப் படாதவன நீ ஒருவனதான. மறற எல்லோரும் கைது செய்யப்பட்டு விட்டாாகள. பிரிட்டிஷ அரசாஙகம் எனககுப் பத்து வருஷம் கடுங்காவல் தண்டனை விதித்தது. பகதசிங்குககு ஏழு வருஷம். மற்றவர்கள்

எல்லோருக்கும் ஐந்து வருஷம். ஆனல் நாடு சுதந்திர மடைநதபின இநதிய அரசாஙகம் எலலோரையும் விடுதலே செயது விட்டது அதன பிறகு எல்லோரும் அவரவா பிழைககும வழியைப பாாததுக கொண் டாாகள. எனககு ஒத்தாசை செயய வேறே யாரும் இல்லே அதனலதான நான ராணுவததில சோந தேன...'' என்ருன்.

ராஜா பெருமூசசு விட்டான. ''நானும் அப் பொழுதே போலீஸாரிடம அகபபடடிருநதால எனனு டைய வாழககையும் ஏதாவது ஒரு ஒழுஙககு வநதிருக்கும வெஙகையா போலீஸாரிடம அகபபட்டுக் கொளளாததுதான எனனுடைய துரதிாஷடம் போலிருககிறது இனனும என்ன செயவது எனறு தெரியாமல தடுமாறிக கொணடு நிறகிறேன...இனி எபபடிப் பிழைபபது எனபதே எனககுப புரியவிலலே,'' எனறு கவலேயுடன கூறினன.

''ராஜா, நான சொலவதைக் கேள. எநத மனிதனும் இபபடி அனமததாகத் திரிநது கொணடிருககக கூடாது. இபபொழுது மறுபடியும ராணுவத்தில ஆள சோததுக கொணடிருககிருாகள எனறு கேளவிபபட்டேன முதலில் எபபடியாவது உளளே நுழைநதுவிடு நீ படிததவன. தாஞக உயாநத பதவி கிடைககும நீ ராணுவததைச் சோநத அதிகாரியாகவோ ஆசிரியராகவோ மாறி விடலாம. பிறகு வாழககை ஜமமெனறிருககும். சிவிலியனுடைய வாழககையை விட மிலிட்டரியைச் சோநதவனுடைய வாழககை ஒழுஙகாக இருககும். தவிர...சிவிலியனகளுடைய வாழககையை விட நம் முடைய வாழககை நிலேயானது. கவலேயிலலாதது. எனககெனனவோ இநத வாழககை மிகவும பிடிததுப் போயிருககிறது ராஜா. நீயும வநதுவிடேன ..வேலே தேடி அலேநது தவிபபதைவிட இது எவவளவோ மேலானது. நீ என்ன சொலகிருய?'' எனறு கேட்டான வெஙகையா.

ராஜா யோசித்தான். சாதாரண உத்தியோகத்தில் சோநதாலும் அவனுடைய வாழக்கை கடடுபபாடில்

லாமல் அலைந்து கொண்டு இருக்கத்தான் போகிறது. அதைவிட ராணுவம் மேலானதுதான. ராணுவ வாழக்கையில பெண்களோ பிரசனைகளோ குறுககிட முடியாது.

ஆனால் சுசீலா ?

இதுவரை அவன சுசீலாவைப் பார்க்க முயற்சி செய்யாமல இருநத காரணம அபபொழுதுதான் அவனுக்குப புரிநதது. ஊரைவிட்டு ஓடிவநத பினனல் இவவளவு காலம கழிததுக கையில காசிலலாதவனாக, அனாதையாக, வேறு திககிலலாதவனாக எபபடி அவள் முனனால போய நிறபது? 'எப்பொழுதோ, ஏதோ ஒரு காலததில, உணாசசி வசப்படுமபடியான ஒரு நிலைமை யில உனனைத் தவிர வேறு யாரையும மணம செயது கொளள மாட்டேன என்று நீ சததியம செயதாயே... அதை நமபிக கொணடு இதோ இபபொழுது உன முனனால கையில காசிலலாதவனாக, அனாதையாக வநது நிறகிறேன. எனனைக கலயாணம செய்து கொண்டு காபபாற்று', என்று சொலலிக கொணடு போய நினறால அது நனறாக இருக்குமா...?

தவிர,

சுசீலா இபபொழுது எப்படி இருககிறாளோ...?

ராஜா ராணுவத்தில சோவது எனறு முடிவு செய்து விட்டான "சரி வெஙகையா. உனனுடைய யோசனை தான எனககு நலலதாகத தோனறுகிறது நாளைக் காலையில நான ராணுவததுககு ஆள சோககுமிடததுககு வநது விடுகிறேன...'' எனறான.

"சபாஷ ராஜா நீதான புத்திசாலி ராணுவத்தில் சேருமபோது நீ வெடிகுணடு வீசினதைப பறறி யாரிடமும சொலலி விடாதே. பிறகு அநத விஷயம் தெரிநது விட்டாலும பரவாயிலலை முதலில உளளே நுழைநது விடு பிறகு எலலாவறறையும பாாததுக் கொளளலாம,'' எனறான் வெஙகையா.

ராஜா அவ்வாறே செய்வதாகக் கூறினுன்.

கடைசியாக வெங்கையா விடைபெற்றுக் கொண்டு செல்லுமபோது, "ராஜா செலவுககுப் பணம் இலலே யெனறு சொனனுயே. இதை வைததுககொள..." எனறு கூறி ஒரு ஐநது ரூபாய் நோட்டை எடுதது ராஜாவின கையில திணித்து விட்டான.

ராஜா உணாசசியால் தத்தளிததுப் போய் விட்டான வெஙகையாவிடம பணம வாஙகிக கொள வதறகு எபபடியோ இருநத போதிலும அநதப் பணததை மறுதது விட்டால பிறகு எனன செயவது என்ற எணணம அவனேத தடுமாறச செயதது. "மிகவும நனறி வெஙகையா உணமையாக உன கையில தமபிடி கூட இலலே. இநத உதவியை நான மறககவே மாட் டேன," எனறு கூறிய பொழுது ராஜாவின கணகளில் கணணீர் வநது விடுமபோல இருநதது.

## அத்தியாயம் : 25

மறுநாள் காலேயில ராஜா ராணுவத்துக்கு ஆள் சேர்ககும இடததை நோககி நடநது கொணடிருந தான. அவனுடைய மனம எனனவோ அதை விருமப விலலே வேறு விதியிலலாததால தான அநதக காரி யததைச செயவதாகத தோனறிறறே தவிரத தாளுக மனம விருமபி அநதக் காரியததைச செயவதாக அவனுக்குத தோனறவில்லே.

எப்படியோ நடக்கிறபடி நடக்கட்டும். இதுவரை எதுவுமே அவனுடைய விருபபபபடி நடககவிலலே. இஸபேட் ராணி கிளபபுக்கு வெடிகுணடு வீசப் போன போதுகூட அது அவனுடைய விருபபப்படி நடநததாகத் தெரியவில்லே. அவனே ஏதோ ஒருசக்தி பிடரியைப்

பிடித்து உந்தித் தள்ளிக் கொண்டிருந்தது. ஏதோ ஒரு விதியை நோககி அவனைத் தளளிககொணடு போயக் கொணடே இருநதது. உமம எனனதான நடககிறது பாாபபோமே...?

_ _ரவரை அனுபவித்ததைவிட என்ன பெரிய துனபம வநதுவிடப போகிறது மன வேதனையை அனுபவிபபதை விடப் பட்டினி கிடப்பதும சாவதும் கூடப பெரிய துனபஙகள ஆகாது ஓயாமல எரிநது கருகிக கொணடே இருககும வததியைப போல உளளம் கருகிக கொணடே கிடககிறதே? இநத வேதனையை விடப பெரிய கஷடம வேறொனறிருககவே முடியாது. நடபபது நடககடடும...

ஆனால், ராணுவத்துககு ஆளசோககும் இடத்துக்கு வநத பினனாலும ராஜா சிறிதுநேரம அநத இடத் தையே வெறிததுப பாாததுக கொணடு நினறான. உளளே ராணுவ உடை அணிநத சிலா போயக் கொணடும வநது கொணடும இருநதாாகள பத்துப் பனிரெணடுபோா குமபலாக நினறு கொணடிருந தாாகள.

தானும அவாகளோடு போயச சோநது கொளள வேணடியதுதான. அதைவிட வேறு வழியிலலை.

ராஜா அஙகிருநது போவதறகாகக காலடி எடுத்து வைததபோது அவனைத தாணடிக கொணடு போயக கொணடிருநத ஒரு காா திடீரெனறு நினறது பிறகு அபபடியே பினனோககி வநது அவன அருகில நினறது. "டேய ராஜா இஙகே எனனடா பணணறே...?"

பூமி தனககுக கீழே திடீரென்று பிளநது போய் விட்டதா? அலலது வானததிலிருநது ஒரு அதிசய சகதி குபீரெனறு பாய்நது இறஙகி அவனைக கொததித் தூககி விட்டதா?

ராஜாவின் உடலே ஆடிப் போய்விட்டது அவன் தலை சுறறிற்று. மயக்கம் போட்டு விழுநது விடுவது

போல் அவன தததளித்தான். காரிலே இருநது இறங்கி அவன தோளேப பிடிததுக கொணடு நினற ஆள, “எனனடா ராஜா. ஏணடா இப்படித் தடுமாறிககிட்டு நிறகறே ” எனமுன

இனனும ராஜாவால் பேச முடியவிலலே. பேச வாயெடுபபதறகு முனனுல கணணீா கொபபுளிததுக் கொணடு வநதது “இலலேயடா வேணு...உனனேப் பாாததததால உணடான அதிாசசியில எனககு எனன பேசுவதெனறே தெரியவிலலேயடா ” எனறு நாததழு தழுககக கூறினுன ராஜா.

“சரி இஙகே எனனடா செயதுககிட்டிருககறே... டெலலியிலே...” எனறு கேடடான வேணு.

“ஒணணும செயதுககிட்டிருககலேடா...ராணுவத் திலே சோநதுடலாமனு வநது நினறேன. இனனும ஒரு நிமிஷ நேரம தாமதமா வநதிருநதா நீ எனனேப பாாததிருகக முடியாது...” எனமுன ராஜா

“அடபபாவீ ராணுவத்திலே சேர்வதறகு வநதாயா...? சரிசரி. வாடா...காரிலே ஏறிககோ...” எனமுன வேணு.

ஒரே ஒரு கணநேரததிறகுள ராஜாவின உளளத்தில எனனெனனவோ உணாசசிகள பொஙகி விடடன. கலலூரிப பூஙகாவிலே உடகாாநது கொணடு காதல கடிதம எழுதச சொனனுனே அதே வேணுதான இவன. அநத நிகழசசிதான அவனேக கயிறறுநத பட்டமாககி வானததில பறகக விடடுவிடடது. அவனுடைய வாழககையில நோந்த அதததனே விபரீதஙகளுககும் அநதச சமபவமதான காரணம. மறுபடியும அவன வநது அழைககிருனே? இனனும எனனெனன விபரீ தஙகள நோநதுவிடப போகிறதோ? எனறு பதைததது ராஜாவின உளளம.

இனனும எனன விபரீதம நேர்நதுவிட முடியும? எதுதான நேரிடப போகிறது? அதையுமதான பாாததது விடுவோமே?

ராஜா வேணுவுடன் காரில் ஏறி உட்கார்ந்தான. கார் பிரமாண்டமான ஒரு லாட்ஜின் முன்னுல போய் நின்றது.

வேணு மிகவும் வசதியாக இருந்தான். அவனுடைய உடம்பில கண்ணுடிபோல பளபளககும் சட்டை மினனிறறு உடலே தளதள எனறிருநதது சுசீலாவின வீட்டில அனுதையாக வநது வளாநத பையனு இபபடி இருககிறுன? இவனுடைய வாழகதையில இவவளவு செலவம எபபடி வநது சோநதது? ராஜாவுககு ஒனறுமே புரியவிலலே.

வேணு ஏறறுமதியையும இறககுமதியையும பறறிப பேசினுன அவனுடைய வாயில லடசக்கணககான ரூபாயகளே அடிபடடன. அவனேப் பாாகக வநதவாக ளெலலாம ஏராளமான பணததில புழஙகும புளளிகள். வேணு பிரமாண்டமான ஏதோ ஒரு தொழிறசாலே சமபநதமாக மத்திய அரசாஙகததின அனுமதி பெறு வதறகாக வநதிருநதான அநதத் தொழிறசாலேத திடடம நிறைவேறி விடடால வேணு கோடிககணக கான ரூபாயில புரளத தொடஙகி விடுவான அதன பிறகு தெனனுடடிலேயே அவனுககு இணையான வேருரு முதலாளி இருகக முடியாது எனற விவரஙகளே ராஜா தெரிநது கொண்டான.

ராஜாவைத தனனேடு அழைத்துக கொணடுவநத பிறகு வேணு ஒனறும பேசவிலலே. போகிற இடததிற கெலலாம அவனேயும அழைததுக கொணடு போனுன. தனனேப பாாகக யார் வநதபோதிலும அவனேயும வைததுக கொணடு பேசினுன. இரணடு பேரும ஒனருகச் சாபபிட்டாாகள். ஒனருகத தூஙகினுாகள். இரணடு நாடகள இபபடிக கழிநதன.

மூனருவது நாள '

வேணு வநத காரியம வெறறிகரமாக முடிநது அவன ஊருககுப புறபபட்டுக கொணடிருநதான. தனனேப் பொறுத்த வரையில் அவன் என்ன செய்யப்

போகிறுனே என்று ராஜா ஆச்சரியப்பட்டுக் கொண் டிருநதான.

"எனனடா ராஜா... உனனுடைய சாமான்களை எலலாம எஙகே வைததிருககிறுய? நாம ஊருககுப் போகலாமடா," எனறுன வேணு.

"எனகிடடே ஒரு சாமானும இலலேடா .. போடடுககிடடிருககற துணிகளைத தவிர வேறே துணிகள கூடக கிடையாது மனுஷன உலகததுககு வருமபோது ஒணணும இலலாமே வாருன. வாழற காலததிலே மூடடை மூடடையாக வீடு வாசல் அது இதுனனு வாஙகி வாஙகிச சோதது வைககருன போற போது எலலாததையும விடடுடடுப போயிடருன... நான இனனும வாழவே ஆரமபிககலலேடா வேணு .. அதனுலே எனகிடடேச சாமானும சேரலலே ." எனறுன ராஜா.

வேணு அநதப பேசசைச ரசிததுக் கேட்டுக் கொணடிருநதான "நீ சொலவது நூறறுககு நூறு உணமையடா ராஜா... சரி நாம ஊருககுப போவோம. உனககு வேணுமகற துணிமணி எலலாம அஙகே போய் வாஙகிக கொளவோம. விமானததிலே ஒரே இரவு தானே பிரயாணம...கவலைபபடாதே" எனறுன.

"சென்னைககு வநது நான எனனடா செய்யட்டும்...? எனனை அழைததுக கொணடு போய எனன செயயப போகிறுய?" எனறு கேடடான ராஜா.

"உனனுடைய வாழககை அவவளவு பயனற்றது எனறு நினைததுக கொணடாய? ஓகோ ஒருகாலததில இநத நாடு நீ நினைககிறமாதிரிததான இருநதது. பிரிடடிஷ் அரசாடசி நடைபெறற காலம அது... ஒரு ரூபாயககு எடடுபபடி அரிசி விறற போதிலும ஜனஙகள ஒரு ஆழாககு அரிசி வாஙக முடியாமல திணடாடின காலம அது. இரணடு தமபிடிககு மணணெணணெய் வாஙகி விளககு ஏறற முடியாமல் இருட்டிலேயே வாழநத குடும்பஙகள அநதக் காலத்தில் ஏராளம.

இரண்டணுவுககு ஒரு வேட்டி கிடைத்தபோதிலும ஒருவன ஒரே வேடடியுடன காலம தளளின காலம் அது.

"இநதக காலம் அப்படிப்பட்ட காலம இல்லே ராஜா. காஙகிரஸ அரசாஙகம தீட்டின ஐநதாணடுத் திடடஙகளில நாடு செழிபபடைநது வரும காலம இது ஒரு ரூபாயககு ஒருபடி அரிசி விறருலும இனனும உயாநத விலேயில உயாநத ரகமான அரிசி கிடைககுமா எனறு தேடுகிற காலம இது. கலேகளும இலககியங களும பெருகிக கொணடிருக்கிற காலம இது...

"இநதிய நாட்டில காஙகிரஸ அரசாடசியின கீழ ஏறபடடு வருகிற மாறுதலே வாாதததையால வாணிகக முடியாது ராஜா பிரமாணடமான அணேககட்டுகளும தொழிறசாலேகளும விவசாயததையும தொழிலகளேயும் மளமள எனறு பெருககிக கொணடு வருகினறன. ஜனஙகளின வருமானமும தேவைகளும அதிகரிததுக கொணடே இருககினறன இனனும சிறிதுகாலததில இநத நாடு உலகததில உளள முனனேறறம அடைநத நாடுகளோடு தலே தூககி நிறகத தொடஙகிவிடும

"அநதக காலததில, வேலே இலலே, இலலேயென்று ஆடகள அலேநதாாகள. இநதக காலததில பெருகிவரும தொழிறசாலேகளுககுத தேவையான ஆடகள எஙகே எஙகே எனறு அலேநது திரிகிருாகள உனனேபபோல் படிததவன வேலே கிடைககவிலலேயே எனறு கவலேபபட வேணடிய அவசியமே கிடையாது.

"ராஜா நான புதிதாக ஆரமபிககப போகும தொழிறசாலேயைப பொறுபபாகக கவனிததுக கொளள நமபிககையான ஆள இலலேயே எனறு நான தவிததுக் கொணடிருநதேன. நீ இநதச சமயததில கிடைததது எனனேப பொறுததவரையில் பெரிய அதிாஷடமடா... எனனேடு வருவதறகு உனக்குச சமமதம தானே...? சரி...கவலேயைவிடு. இனி எலலாவறறையும நான

கவனித்துக் கொள்கிறேன்,'' என்று ஒரு பிரசங்கமே செய்து முடித்தான் வேணு.

ஆளும அந்தஸதும மாறிவிட்டபோதிலும வேணுவின் குணம மாத்திரம சிறிதுகூட மாறவே இல்லை. இன்னும அவன பழைய வேணுவாகவே இருந்தான். அன்றும் அவன காங்கிரஸ்வாதி. இன்றும காங்கிரஸவாதி அன்றும பிரசங்கம செய்வது அவன தொழில். இன்றும அதுதான அவன தொழில. வேணுவின் கட்டளையை ராஜாவால மீறமுடிந்ததே இல்லை.

ராஜா மறுபடியும விதியின கையில பொம்மையாகி விட்டான. வேணுவின கையில் வாழ்க்கையை ஒப்படைத்து விட்டான.

வேணு புதிதாக விலைக்கு வாங்கியிருந்த அழகிய சிறு பங்களா ஒன்றில ராஜா தங்குவதற்கான ஏற்பாடு செய்தான அங்கே எல்லா வசதிகளும இருந்தன. சமையல செய்வதற்கும் இதர தேவைகளைக கவனித்துக் கொள்வதற்கும ஆள இருந்தான அவனுக்கென்று ஒரு கார் கொடுக்கப்பட்டது. டெலிபோன, ரேடியோ, முதலிய எல்லா வசதிகளும அந்த வீட்டில் இருந்தன. தான ஒருவனுக்காக இத்தனை வசதிகள அவசியமா என்று ராஜாவுக்குப பிரமிப்பாக இருந்தது.

முதலநாள பூராவும வேணுவும ராஜாவும் ராஜாவுக்குத் தேவையான உடைகளை வாங்குவதற்காகச சுற்றியலைந்தனா. எல்லாம முடிந்ததும், "நாளைக் காலையில உன்னுடைய காரில ஆபீஸுக்கு வந்துவிடு. டிரைவர் சரியாக எட்டு மணிக்கு உன வீட்டுக்கு வந்து விடுவான...நீ புறப்படுவதற்கு அரைமணி நேரம் போதும என்று நினைக்கிறேன. எட்டரை மணிக்குள் ஆபீசுக்கு வந்து விட்டால் போதும்...தொழிற்சாலை சம்பந்தமான சிப்பந்திகளை உனக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறேன். தற்காலிகமாக என்னுடைய ஆபீசிலேயே தனிப்பிரிவாக தொழிற்சாலை ஆபீசும இயங்கி வரும்.

இந்தப் பிரிவுக்கு முழுப்பொறுப்பும் நீயே ஏற்றுக் கொள்ள வேண்டியது. சீக்கிரம் தொழிற்சாலை முடிந்து வேலை தொடங்கிவிட வேண்டும். அதை எவ்வளவு சீக்கிரம் செய்து முடிக்கிறாய் என்பது உன்னுடைய சாமர்த்தியத்தைப் பொறுத்தது. பணத்திற்காகவோ, வேறெதற்காகவோ எதற்குமே நீ என்னை எதிர்பார்க்க வேண்டிய அவசியம் கிடையாது. எல்லாம் உன்னுடைய இஷ்டம்தான். நான் உனக்குக் கொடுக்கப் போகும் சிப்பந்திகள் முதல்தரமானவர்கள் அவர்களுடைய உதவியால் நீ என்ன வேண்டுமானாலும் செய்யலாம்," என்றான் வேணு.

சுசீலாவைப் பார்க்கப் போக வேண்டும் என்று ராஜாவின் உள்மனம் தவித்துக் கொண்டிருந்தது. ஆனால் வேணு சிறிது நேரமாவது அவனைத் தனியாக விட்டால்தானே?

வேணு ஏன் சுசீலாவைப் பற்றி ஒன்றுமே கூறவில்லை? வேணுவுக்கு இவ்வளவு பணம் எப்படி வந்தது? ராஜா குழப்பத்தில் ஆழ்ந்தபடி படுத்துக் கொண்டான்.

சுசீலாவைப் பார்க்க வேண்டும் என்ற பதற்றம் அவன் உள்ளத்தில் துடித்துக் கொண்டிருந்த போதிலும் கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒரு சக்தி அவனைக் கட்டிப் போட்டு விட்டதுபோல் இருந்தது. சுசீலாவைப் பார்க்க வேண்டும் என்று நினைத்தான். ஆனால் அந்த எண்ணத்தைச் செயல்படுத்துவதற்கான முயற்சி எடுத்துக் கொள்ள அவனால் முடியவே இல்லை.

மறுநாள் காலை எட்டு மணிக்கு டிரைவர் வந்து விட்டான். ராஜா அதிகாலையிலேயே எழுந்து முகச் சவரம் செய்து, குளித்து உடையணிந்து கொண்டு தயாராக இருந்தான். சமையல்காரன் பலகாரம் காப்பி எடுத்து வைத்தான். ராஜா சாப்பிட்டு விட்டுப் புறப்பட்டான்.

வேணுவின் ஏற்றுமதி, இறக்குமதி வியாபாரக் கம்பெனி பிரமாண்டமான கட்டிடத்தில்

ஏராளமான சிப்பந்திகள அஙகே வேலை செய்தனர். பெரும்பாலும பெணகள தான் காணப்பட்டனர். விதம் விதமான அழகிகள் வெவவேறு அலுவலகளைக் கவனித் துக கொணடிருபபதைப பாரத்த போது ராஜாவுககு மலைப்பாக இருநதது. பெணகளுககாக நடைபெறும் ஸதாபனமா எனன? பெணகள எலலோரும இபபடி உததியோகததிறகுக கிளமபி விட்டால் சமுதாயத்தில் எபபடித்தான குடுமப வாழககை நடைபெறும் எனறெலலாம பலவிதமான எணணஙகள ராஜாவின் மனதில ஊசலாடிக கொணடிருநதன.

ராஜா நேராக வேணுவின அறைககுச செனறான. வேணுவின மேஜைமேல சாயநதபடி கலயாணி என்ற அழகிய மஙகை ஒருததி பேசிக கொணடிருநதாள. கொழு கொழு எனறு பிரமாதமாக இருநதாள. கலயாணி திருமபி ராஜாவைப பாரதத பாரவை— ராஜாவுககு உடனே ஸடெலலா மேரியின நினைவு தான் வநதது.

கலயாணி தனனுடைய காரியதரிசினி எனறும் தன் னுடைய வேலையில பெரும பகுதியை அவள தான கவனிததுக கொளவது வழக்கம எனறும கூறி வேணு அவளை அறிமுகப் படுத்திவைததான அதுமட்டுமா?. "ஆ...ராஜா இநத ஆபீஸில கலயாணி இலலாமல வாழககை நடததுவதைப பறறி எனனால கறபனை செய வதறகுக கூட முடியாது அவள இலலாவிட்டால ஒரு நிமிஷ நேரம கூட எனனால இஙகே இருகக முடியாது" எனறான வேணு.

கல்யாணி நமட்டுச சிரிப்புச் சிரிததாள. அவளு டைய குரலவளை பூராவும கொழுப்புக் கட்டிக் கொண டிருக்க வேண்டும அபபொழுதுதான சிரிபபின் ஓசை அநத மாதிரி இருக்கும.

ஒரு முதலாளி தன்னுடைய காரியதரிசினியைப் பாராட்டும வாரத்தைகளா அவை? ராஜாவுக்கு என்னவோ மாதிரி இருநதது அவன் மனதில ஏதோ ஒரு வகையான வெறுபபு தலை தூக்கத் தொடஙகிற்று.

பழைய ஆபத்துகளை எல்லாம் தாண்டிப் புதிய ஆபத்து ஒன்றில வநது மாட்டிக கொண்டாற போல இருநதது.

ஆனல், வேணுவின அநதரங்க வாழககை எப்படிப் பட்டதாக இருநதால என்ன? அதறகும் தனக்கும் என்ன சமபநதம? அதனுல் தன வாழவில் என்ன விபரீதம நேரிடடுவிடப போகிறது? சமபளத்திற்கு வேலை செயயப போகிற ஒவவொருவனும தன முதலாளியினுடைய அநதரஙக வாழகையைப பறறிக் கவலைப படடுக கொணடிருபபதில்லை என்று நினைத்து ராஜா தன மனதைச சமாதானப படுததிக கொண டான. அது எவவளவு முடடாள தனம என்பது பிறகு தான அவனுககுப புரிநதது.

வேணுவும கலயாணியும அவனைத தொழிற்சாலைப் பிரிவுககு அழைததுச சென்றனா. வேணு அஙகிருநத சிபபநதிகளை அறிமுகப படுததி வைததான கல்யாணி தொழிற சாலை சமமநதமான விவரஙகளைக கூறினுள். சாககாரும தனிபபடட முதலாளிகளும சோநது கூட் டாக நிறுவும ஸதாபனம அது, யாா யாருககு என்ன பஙகு இருககிறது வேலைகள எநத அளவு நடை பெற் றிருககினறன. அநதத தொழிறசாலை நமது நாட்டின தேசிய பொருளாதாரததில என்ன பஙகு வகிககப் போகிறது என்ற விவரஙகளை அவள கூறிய போது கலயாணி உணமையாகவே கெடடிக காரி தான. அவ ளுடைய வேலைத திறமை காரணமாகவே வேணு அவளைப பறறி அபபடிக கூறியிருககலாம என்று நினைத தான

கமபெனி சமபநதமான விவரஙகளைப் படித்துத் தெரிநது கொளளுமபடியாகவும அன்று மாலை வீடடிற குப போகலாம என்றும கூறினுன வேணு.

"வீட்டிறகா?" என்று ஆசசரியத்துடன் கேட்டான் ராஜா.

"ஆமாம். நீ என் வீட்டை வந்து பார்க்க வேண் டாமா? என் மனைவியைத் தெரிநது கொள்ள வேண்

டாமா?" என்று சிரித்துக் கொண்டே கூறினான் வேணு. கல்யாணியின கண்களிலும ஏதோ விஷமத் தனமான பாாவை தோனறி மறைநததாக ராஜாவுககுத் தோன்றியது. அனறு மாலே தான் சுசீலாவைப போயப் பார்க்க விரும்புவதாகச சொலலி விடலாம எனறு நினைத்தான் ராஜா. ஆனால அவனுககு மனம வரவிலலே சரி இன்னொரு நாள தாமதிபபதால ஒனறும கெட்டுப் போவதில்லே என்று நினேததுக கொணடவனுகச 'சரி' என்று தலேயை அசைத்து விடடான்

நேரம போனதே தெரியவில்லே. தொழிற்சாலே சம்மநதமான கணககு விவரஙகளேப பாாதத போது தான வேணு எவவளவு பணததில புரளகிருன எப்படிப் பட்ட கோடீஸவரராகள எலலாம அவனுடைய கூட்டாளிகளாக இருககிருாகள என்ற விவரஙகள எல்லாம் தெரிய வநதன. வேணு இநதியாவில உளள மிகப் பெரிய புள்ளிகளில ஒருவனுகி விட்டான. அதைக் குறிதது ராஜாவின மனம சநதோஷப் படவில்லே. நாட்டின செலவம பூராவும இபபடி ஒரு சிலருடைய கைகளில் குவிவது சரிதானு எனற ஐயம தான் அவன் மனதில் உணடாயிறறு. புரடசிககாரனுக இருநதபோது அவன கேளவிபபடடிருநத வாதஙகள எலலாம அவன மனதில் மீணடும் தோனறின. ஒரு மனிதன நலலவன், தியாகி, பரோபகாரி எனபவை எலலாம உணமையாக இருக்கலாம. அவன எபபடி இருநத போதிலும அவனிடம அளவறற செல்வம குவிவது நலலதல்ல ரயில்வேயைப் போல் பெரிய தொழில ஸதாபனஙகள் சாக்கார் உடமையாக இருப்பது தான நல்லது.

சர்க்கார் ஸதாபனங்களில ஊழல்கள் அதிகம்; திறமையான நிாவாகம நடை பெறுவதிலலே, என்றெல்லாம் குற்றம சாட்டபபட்ட போதிலும், அதனுல் அநதத் தொழிலால் கிடைக்கும வருமானம் பூராவும் தனிப்பட்ட ஒருவனுக்கோ அலலது சில பேருக்கோ போய்ச் சேர்வதாவது தடுக்கப்படுகிறது. அதிகாரிகள், சிப்பந்திகள எனறு பலபோ் வாழககை நடத்துவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது.

ராஜாவின் மனதில் பலவிதமான சிந்தனைகள் ஓடிக் கொண்டிருந்தன மாலை ஐந்து மணிக்கு வேணு அவனு டைய அறைக்கு வந்தான். "வீட்டிற்குப் போகலாமா...? என்னுடைய முக்கியமான நண்பர் ஒருவரைத் தேநீர் சாப்பிட அழைத்துக் கொண்டு வருவதாக வீட்டிற்கு டெலிபோன் செய்து விட்டேன். என் மனைவி காத்துக் கொண்டிருப்பாள்..." என்றான். சிந்தனையில் மூழ்கிப் போயிருந்த ராஜா பேசாமல் எழுந்து நடந்தான்.

வேணு முன்பும் அவனுடைய மாமா நீதிபதி சந்திர சேகரம் வீட்டில் தான் தங்கியிருந்தான். அதனால் வேணு அவனை அங்கே அழைத்துச் சென்றபோது ராஜா ஆச்சரி யப்படவில்லை. அவனுடைய மனம் திக் திக் என்று அடித் துக் கொள்ளத் தொடங்கிவிட்டது சுசீலாவையும் தான் அங்கே பார்க்க நேரலாம். காரியம் மிகவும் சுலபமாகிப் போய் விட்டது என்று நினைத்தான்.

சுசீலாவின் வீட்டில் முன்பு இருந்ததை விட ஏராள மாக மரங்களும் செடிகளும் கொடிகளும் காணப்பட் டன. பெரிய காட்டின் நடுவில் நிற்பது போல காட்சி யளித்தது அந்த பங்களா. ராஜா வேணுவுக்குப் பின்னால் அமைதியாக நடந்தான்.

தோட்டத்தின் மத்தியில் நீண்ட மேஜை போடப் பட்டிருந்தது அதன் மேல் மூன்று பேருக்குச் சிற்றுண்டி வகைகள் பரிமாறி வைக்கப்பட்டிருந்தன. மூன்று நாற் காலிகள் போடப்பட்டிருந்தன. பணியாள் ஒருவன் தயாராகக் காத்துக் கொண்டிருந்தான். "சீனி... அம்மாவை வரச் சொல் என்று கூறிவிட்டு நடுவிலிருந்த நாற்காலியில் அமர்ந்தான், வேணு வலது பக்கம் மேஜை யின் குறுக்கு வாக்கில் இருந்த நாற்காலியில் ராஜா அமர்ந்தான். இடது பக்கம் மேஜையின் குறுக்கு வாக் கில் ராஜாவுக்கு நேர் எதிராகப் போடப்பட்டிருந்தது இன்னொரு நாற்காலி. 'வேணு சுசீலா எங்கே?" என்று கேட்பதற்காக வாயெடுத்தான் ராஜா. அதற்கு முன்னால் சுசீலாவே அவர்களை நோக்கி வந்து கொண் டிருந்தாள்.

அதே கம்பீரம்' அதே அழகு' ஆனால் முன்னை விட அவளுடைய தோற்றத்தில் மிகவும் அதிகமான கடுமை காணப்பட்டது. ராஜாவைப் பார்த்த பிறகு கூட அவள் முகத்தில் சிறிது கூட மலர்ச்சி காணப்படவில்லை. சுசீலா திடுக்கிட்டுப் போய்த் தடுமாறியபடி அருகிலிருந்த செடியைப் பிடித்துக் கொண்டு நின்று விட்டாள். கண நேரம் தான் அந்தத் தடுமாற்றம். உடனே சமாளித்துக் கொண்டாள். சிறிது கூடச் சலனமென்பதே இல்லாமல் அமைதியாக நடந்து வந்து ராஜாவுக்கு நேர் எதிரில் கிடந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டாள்.

"ராஜா.. சுசீலாவை உனக்குத் தெரியும் நம்முடைய பழைய க்ளாஸ்மேட். இப்பொழுது என் மனைவி... மாமாவினுடைய உயிலபடி நாங்கள் இரண்டு பேரும் திருமணம் செய்து கொண்டதால் அவருடைய சொத்துக்கள் பூராவும் எங்கள் இரண்டு பேருக்கும் கிடைத்தன. அதை வைத்துத்தான் இவ்வளவு தூரம் நான் வியாபாரங்களை அபிவிருத்தி செய்தேன் வியாபாரங்கள் தொழிற்சாலை எல்லாவற்றிலும் சுசீலாவும் எனக்கு ஈக்வல் பார்ட்னர் அதனால் சுசீலாவும் உனக்கு முதலாளியாகிறாள் என்பதைத் தெரிந்து கொள... நாங்கள் இரண்டுபேரும் திருமணம் செய்து கொள்ளாமல் இருந்தால் சொத்துப் பூராவும் தர்மத்துக்குப் போயிருக்கும். நானும் சுசீலாவும் குடியிருக்க வீடுகூட இல்லாமல் திண்டாடியிருப்போம் நல்ல காலமாகச் சுசீலா என்னைத் திருமணம் செய்து கொள்ளச் சம்மதித்தாள் எல்லாம் நல்லபடியாக நடந்து விட்டன..." என்று கூறிக் கொண்டிருந்தான் வேணு.

ராஜாவின் ஆத்மா அடியோடு சுருண்டு சுருண்டு சுருண்டுபோய் அடிவயிற்றுக்குள் பதுங்கி விட்டது. அதற்குப் பின் அவன் பேசினானா? ஆமாம் பேசினான். என்ன பேசினான் என்பது அவனுக்குத் தெரியாது. சிரித்தானா? ஆமாம். சிரித்தான். ஏன் சிரித்தான் என்பதும் தெரியாது. சாப்பிட்டானா? ஆமாம் சாப்பிட்டான். என்ன சாப்பிட்டான் என்பதும் அவனுக்குத் தெரியவே தெரியாது.

அடிக்கடி அவனுடைய கண்களில் கண்ணீர் பொங்கிப் பொங்கி வநதது. சிரிக்கின்ற பாவனையில், சாப்பிடுகினற பாவனையில எதையாவது செய்து கணணீரைத் துடைத்துக் கொண்டான். இதயத்தில் பொஙகிவநத விம்மல்களை எபபடியோ சமாளிததுத் தன மனத்துள அடக்கிக் கொணடான. அவன் அழவில்லை தவிக்கவில்லை. தான் அனுபவித்த சித்ரவதை செய்யப்படுவதைப போனற நரக வேதனையைத் துளிக் கூட வெளியில காட்டிக் கொளளவும் இலலை.

அவனுடைய வாழக்கையில் அதைவிடப் பெரிய சோதனை ஏற்படவே இலலை அவன் அருகில் சியாமளா இரதத வெள்ளத்தில மடிநது கிடநததைப் பார்த்த போதுகூட அவன அத்தகைய துனபததை அனுபவிக்க விலலை. மாயா, சியாமளா, ஸ்டெல்லாமேரி இனனும் எநதப் பெண்ணுமே அவனுடைய வாழ்கையில குறுககிட முடியாமலே போயவிட்ட காரணம இநத சுசீலாதான' அனறு கல்லூரியை விட்டுத துரத்தப் பட்டுத திககிலலாமல அலைநது கொண்டிருநதபோது, 'உனனைத் தவிர வேறெநதப பெணணையும மணம் செய்து கொளவதில்லை, எனறு சுசீலாவுககுச சததியம செயது கொடுதத பிறகு ராஜா வேறெநதப் பெணணையும் பறறி நினைக்கவே இலலை...'

ஆனால் அவள்...'

தன் கையில் அடித்துச் சத்தியம் செய்து கொடுத்துத் தன்னிடமும் சத்தியம் வாங்கிக் கொண்ட அவள்...!

வேணுவை மணநது கொண்டு அவனுடைய மனைவி யாக நிறகிறாளே...? ஐயோ இதைவிடக் கொடுமை வேறுண்டா?

ராஜாவின் உள்ளம் தவியாய்த் தவித்தது. அவனில்லாமல் தங்களால் வாழவே முடியாது என்று துடித்துக் கொண்டு நின்ற சியாமளாவின் தோற்றம்,

மாயாவின் தோற்றம், அவனுடைய மனக்கண்களின் முன்னால் வநது வநது போயின.

சுசீலா...

வாழ்க்கை என்பது இதுதானா? தர்மம் என்பதும் நீதி எனபதும் இவைதானா? ஒருவரை ஒருவர் வஞ்சித்துக் கொண்டு வாழகக்கை நடத்துவதறகுத தானா இநத உலகம் ஏற்பட்டிருக்கிறது? சமுதாயம், சட்டம், சமபிரதாயம் எல்லாம் இதற்காக ஏறபட்டது தானா?

அங்கே வேணுவுககும் சுசீலாவுக்கும் அருகில் இருநத சிறிது நேரததை ராஜா எபபடித்தான கழித் தான எனபதைச் சொலலவே முடியாது.

ஆனால்,

எப்படியோ அவன் சமாளித்து விட்டான். சமுதாயமும், நாகரிகமும் அவன எப்படி நடநது கொளள வேண்டும் எனறு எதிாபார்ககுமே அப்படியே நடநது கொணடான். சுமாா அரைமணி நேரத்துக்குப் பிறகு அவன அவர்களிடமிருநது விடைபெற்றுக் கொணடு போகுமபோது, மனிதனாக இலலாமல் வெறும் பிரேதமாகத்தான போகிறுன எனபது அவாகள இரணடு பேருக்குமே தெரியும.

சுசீலா உடனே தன் கணவனைத் திரும்பிக் கூடப் பார்க்காமல் மாளிகைக்குள் ஓடிப்போய்த் தன் படுக்கையறைக் கதவைத் தாழிட்டுக் கொண்டாள்.

வேணு உயிரிழநதவன் போல் அங்கேயேஉட்கார்ந்து விட்டான். விலையுயர்நத தன் சிகரெட் பெட்டியையும் லைட்டரையும் தவிர அப்பொழுது அவனுக்கு வேறு எதுவுமே தேவையிருக்கவில்லை.

* * *

## அத்தியாயம் : 26

"நாராயணு நாராயணு நாராயணு நாராயணு நாராயணு நாராயணு..." அநத நாமததை ஓயாமல உச்சரிததுக் கொண்டிருபபதிலே ஒரு ஆறுதல பிறககத் தான செய்கிறது.

**கிருஷ்ணு ராமா கோவிந்தா நாாாயணு—அரே**
**ராம கிருஷ்ணு கோவிந்தா நாராயணு...**

திருமபத திருமப அநத வரிகளை முணுமுணுப்பதிலே உள்ளததுககு ஒருவகையான சாநதி பிறககத்தான் செய்கிறது.

அமைதி காண முடியாத உள்ளத்துக்கு அமைதி யளிககக கூடிய சக்தி அநதப பகவானுடைய நாமம் ஒன்றுககு மாததிரமதான உளளது அனலில் மெழுகு போல உளளம தவியாயத தவிததுக கொண்டிருக்கும் நேரததில ஜீவனின தாபததைத தணிதது வைககக் கூடிய சக்தி ஒனறுக்கு மாததிரமே உணடு.

பக்தி எதற்காக என்று கேட்கிறார்களே?

கடவுள எதறகாக? மனிதனின் லௌகீக வாழ்க் கைக்குக் கடவுள எனற ஒனறின அவசியம் என்ன? என்று வரவுசெலவுப் புளளி போட்டுக கணககுக் காட்டி கேடகிறாகளே? மனித சமுதாயத்தை அசைக்க முடியாத கட்டுப்பாடுகளுக்குளளாக்கி விட்டால், மனித னுடைய பணபும் மனிதத தனமையும் வளர்நது விட்டால் பிறகு பாவ புணணியத்தைப பற்றிய பயம் எதற்காக? பாவமும புணணியமும இல்லையென்றால் பகவானும அவசியம் இல்லையலலவா என்று வாதம் செய்கிறார்களே...?

அவர்கள் நிச்சயமாகத் தெரிநது கொள்ள வேண்டும: இரததக் குழாய்களில் இரத்தத்தைச் செலுத்தும் இயநதிரமாக மட்டுமே இருதயம் இல்லாமல்

இருந்தால்—மனிதனின் உணர்வு, சிந்தனை இவற்றை மீறி இயங்கக் கூடிய ஒன்று அவனுடைய உடலுக்குள்ளே இருந்தால்—இரத்தம், தசை, நரம்பு, எலும்பு, தோல், ரோமம், நகம், பல் என்ற மிருகங்களுக்குரிய புலன்களுக்கு அப்பாற்பட்ட ஒன்று இருப்பதை உணரும் சக்தி இருப்பதாலே மனிதன் உயர்ந்த பிராணியாகிறான் என்ற தத்துவத்தில் ஏதாவது உண்மை இருந்தால்—

இருதயம், ஆத்மா, கடவுள் என்ற கண்ணுக்குப் புலனாகாத பொருள்களைக் குறிக்கும் சொற்கள் அவ்வளவுக்கும் பொருள் இருக்கத்தான் வேண்டும். அவற்றில் உண்மையும் இருக்கத்தான் வேண்டும். (இருதயம் என்பது மார்புக்கூட்டில் சற்றே இடப்பக்கமாக இருந்து இரத்தத்தைச் செலுத்தும் கருவி என்பது விஞ்ஞானம். ஆனால் ஒருவனைப் பார்த்து உனக்கு 'இருதயம்' இருக்கிறதா என்று கேட்கும்போது நாம் இதைக் குறிப்பிடுவதில்லை. இருதயத்தால் உணரப் படுவது ஆத்மா. ஆத்மாவால் மாத்திரமே அறியப் படுவது கடவுள் என்ற உண்மையை மனதில் கொண்டு இருதயம், ஆத்மா, கடவுள் என்ற மூன்றையும் கண்ணுக்குப் புலனாகாதவை என்று கூறினோம். ஆ—ர்)

வேணு அவனுக்காகக் கொடுத்திருந்த வீட்டிற்கு வந்து தன்னுடைய அறைக் கதவைத் தாழிட்டுக் கொண்டு படுக்கையில் விழுந்த ராஜா நெடுநேரம்வரை தன்னை மறந்து, 'நாராயணா நாராயணா நாராயணா' என்று அவனுடைய நாமத்தையே ஜபம் செய்து கொண்டிருந்தான். அவனுடைய இருதயம் விம்மி விம்மி அழுதது. கண்ணீர் பொங்கிப் பொங்கி வழிந்தது. நெடுநேரத்திற்குப் பிறகு அவனுடைய ஜீவனைப் பிடித்துக் கொண்டிருந்த தாபம் கொஞ்சம் கொஞ்சமாகத் தணிந்தது அதன் பிறகு அவன் நிதானமாக யோசனை செய்யத் தொடங்கினான்.

சுசீலாவைச் சொல்வதில் என்ன தவறு இருக்கிறது? அவன் சென்னையிலிருந்து ஓடிப்போய் ஏறக்குறையப் பதினான்கு வருஷங்களாகி விட்டன. ராமனைக் கைகேயி

காட்டுக்குப் போ என்று சொன்னது பதினன்கு வருஷ காலம். பஞ்சபாணடவாகள் வனவாசம் சென்றதும் பதினனகு வருஷ காலமதான அநதப் பதினனகுக்கும் மனிதன ஊரை விட்டு ஓடிப்போய் வாழகிற காலத் திற்கும் ஏதாவது சமபநதம இருக்க வேணடும் அதனல் தான தானும பதினனகு வருஷஙகளுககுப் பிறகு சென்னைக்குத திருமபி வருமபடியாக ஏறபட்டிருக் கிறது.

சுசீலாவுக்கும தனக்கும் இடையில் ஒரு வாக்குறுதி யைத் தவிர வேறெதுவும இருககவிலலை. சுசீலா தனனை மணநது கொணட மனைவி அலல. அதிலும் அவள ஒரு சாதாரணமான திககிலலாத பெண. அவளுக்கு அணணனே தமபியோ வேறு நெருஙகின உறவினர் களோ கிடையாது. ஒரே ஒரு வாக்குறுதியை மட்டும் நமபிக கொணடு ஒரு பெண தனியாகப் பதினனகு வருஷ காலம் காததுக கொண்டிருப்பது எனபது கலியுகத்தில நடக்கக கூடிய காரியமே அலல.

ஆண்பிள்ளையாகிய தானே கடைசி நேரத்தில் சியாமளாவை மணநது கொளளலாம என்று நினைக்க வில்லையா? யாா கணடாாகள? விதி குறுககிடாமல் இருநதால இப்பொழுது சியாமளா அவனுடைய மனைவியாகியிருபபாள. சுசீலா மட்டும் இவவளவு காலமாக யாரையும மணநது கொள்ளாமலேயே இருக்க வேணடும என்று எதிர்பாாபபது தவறல்லவா?

தவிர...

சுசீலாவும் வேணுவும் மணநது கொண்டால்தான் சொத்து அவாகளுககுக கிடைககும் என்று சுசீலாவின் தநதை உயில் எழுதி வைததுவிட்டு மரணம் அடைந்த தாக வேணு சொல்லவில்லையா? எதிாபாராத இக்கட் டான நிலைமைதான் சுசீலா வேணுவை மணநது கொள்ளச் சம்மதித்ததற்குக் காரணமாக இருக்க வேண்டும்.

பாவம் சுசீலாவின் வாழ்க்கையில் என்னென்ன சோதனைகள் ஏறபட்டனவோ? அநியாயமாகத் தான் அவள்மேல் குற்றம் சுமத்துவது தவறல்லவா?

என்ன இருநதாலும் வேணு இநத விஷயத்தை முன்னதாகவே தன்னிடம் சொல்லியிருக்க வேணடும். தான சுசீலாவைக் காதலித்த விஷயம தெரிநதிருநதும் கடைசிவரை அவனுடைய மனைவி யார என்பதைத் தன்னிடம சொல்லாமலேயே வீட்டிறகு அழைத்துக் கொணடு போயத தன்னை அத்தகைய அதிர்ச்சிககு ஆளாக்கியிருககக வேணடாம. வேணு செயதது பெரிய கொடுமை!

தான் சுசீலாவைக காதலித்த விஷயம் தெரிந் திருநதும், டெலலியிலிருநது வேணு தன்னை அழைத்துக் கொண்டு வநதிருக்க வேண்டிய அவசியமே இல்லை. எஙகேயோ போய எககேடோ கெட்டுப போகட்டும் என்று விட்டிருககலாம. தன்னை வேணு எதற்காகச் சென்னைககு அழைததுக கொண்டு வரவேண்டும. ஒரு வேளை அவன் காதல கடிதம எழுதச சொன்னதால் தான ஊரைவிட்டே ஓடிப போக வேணடிய நிலைமை ஏறபட்டதறகாகப் பிராயசசித்தம் செயது கொள்ள விருமபுகிறுனு? சுசீலா அவனுடைய மனைவியாகி விட்ட தால் இனித தான சென்னையிலிருநதாலும அதனுல் கெடுதல் ஒனறும் ஏறபட்டு விடப் போவதில்லை. அவனுடைய பழைய நணபன் என்ற முறையில் தனககும நிலையான ஒரு வாழ்ககை ஏறபட வழிசெய்து விடுவோம் என்று நினைககிறுனு?

எவ்வளவு யோசித்த போதிலும வேணுவின் நடத்தைக்குக் காரணமே புரியவில்லை. அதேசமயம் வேணு தன்னுடைய ஆபீஸில் அழகான பெண்களை நிறைத்து வைத்திருப்பதும அவனுடைய காரியதரிசினி என்று சொல்லிக் கொண்ட கல்யாணியிடம் அவன் நடநது கொண்ட முறையும் ராஜாவுக்குச் சிறிதுகூடப் புரியவில்லை.

சிந்திக்கச் சிநதிக்க ராஜாவின் மூளை குழமபிவிடும் போல் இருநதது மறுபடியும் நாராயணு நாராயணு நாராயணு எனறு தன மனதிறகுள் ஜபிககத் தொடங் கினன. ஜபிததுக கொணடே தூஙகி விட்டான.

மறுநாள காலையில எழுநதபோது ராஜாவின் ஆததிரம, குழப்பம எலலாம தணிநது போய விடடன. வாழகைக எபபடி வநது சேகிறதோ அப்படியே ஏறறுக் கொளள வேணடியதுதான. தனனுடைய சகதிககு உடபட்டு நடைபெறும காரியஙகளில் அறிவையும் பொறுமையையும உபயோகபபடுததி நேரமையான நலல வழியில் காரியஙகளைச செயது கொணடு போகலாம. தனனுடைய சகதிககு மீறிப போய விடுகிற காரியஙகளை நினைத்துப் பதறறமும் ஆவேசமும அடைவது அறிவீனம அதனுல் எதையுமே மாற்றிவிட முடியாது.

இனி என்ன செய்த போதிலும் சுசீலா வேணுவின் மனைவி அலல எனறு ஆகிவிடப போவதில்லை. அவளுடைய கழுததில உளள மாஙகல்யத்தின பவித் திரத்தை, புனிதத தனமையைக காப்பாறற வேண்டியது தனககுக் கடமையும் தர்மமும ஆகும. இதுவரை சுசீலாவைப் பறறித் தான எப்படிக கருதியிருநத போதிலும இனி அவளைத தனனுடைய தஙகையாகவே கருதிவிட வேண்டும. இனிமேல் பழைய சமபவம் எதையும் நினைததுக கொணடிருக்கவே கூடாது.

ராஜா அவசரம் அவசரமாக எழுநது குளித்து விடடு உடைதரிததுக கொண்டான். வேலைககாரன் சிறறுணடி கொணடு வநது வைத்தான். ராஜா சாபபிட்டு முடிக்கவும், டிரைவா வரவும சரியாக இருநதது. ராஜா உடனே ஆபீசுக்குப் புறப்பட்டு விட்டான.

ராஜா ஆபீசுக்கு வந்து சேர்ந்தபோது வேணுவும் கல்யாணியும் ஆபீசுககு வரவில்லை. ராஜா அதைப்

பற்றி விசாரித்தபோது ப்யூன் சிரித்தான். "முதலாளி கலயாணியமமா வீட்டிலேதான் ஸார் இருப்பார். அவாகள இரணடு பேருமெ ஒனருகத்தான் வருவாாகள்," எனறு கூறிக்கொண்டே போய் விட்டான.

வேணுவுக்கும் கல்யாணிக்கும எத்தகைய உறவு இருநதது என்பதை அவன் அதைவிட விளக்கமாகக் கூறியிருக்க முடியாது தனககுக கீழ் வேலை செய்யும ஒரு சிபபநதியிடம முதலாளியின அநதரங்க விவகாரங்களைப் பறறி அதறகுமேல விசாரிபபது முறையும அல்ல.

ஏன இப்படிக் கெட்டுப் போய்விட்டான். ஒழுககததைப் பறறி மிகவும உயர்நத கருத்துக்கள் கொணடவனுயிறறே? திருவளளுவா காட்டிய நெறியில் எலலோரும வாழககை நடதத வேணடும எனறு உணாசசிகரமாகப பிரசஙகம செயகிறவன ஆயிற்றே? வேணு மறறவாகள எதிரில் போலியாக வேஷம் போடடு நடிக்கும நயவஞசகன் என்று ராஜா ஒரு காலத்திலும் நினைததிலலை அபபடிப்பட்டவன எதனுல் இப்படி நடநது கொளகிறுன?

ராஜாவுக்கு ஒனறுமே புரியவில்லை.

அன்று காலை பதது மணிக்குத்தான வேணுவும் கல்யாணியும ஆபீசுக்கு வநதார்கள உடனே இரண்டு பேரும் அவரவர் வேலையைக் கவனிககத் தொடங்கி விட்டார்கள. ராஜா வநது விட்டாறு என்றுகூட அவர்கள விசாரிககவிலலை. தனனுடைய அறையில் உட்காாநது கொணடிருநத ராஜாவுககு எல்லாம் புரிநதது. ஆனுல் அதைப பறறி அவன் குறை சொல் வதறகு முடியாது. தொழிறசாலை சமபநதப்பட்ட விஷயங்களை சுயேச்சையாக ராஜாவே கவனித்துக் கொள்ள வேண்டும் எனறுதான வேணு கூறியிருநதான். அவனுக்குப் பூரண சுயேசசை அளித்தும் இருநதான். ஏறகெனவே எல்லா அலுவல்களும் திறமையான ஆட்களால் கவனிக்கப்பட்டு வந்ததால ராஜா வேணு விடம் கேட்கும்படியான சநதேகம் ஒன்றும் ஏற்படவும்

இல்லை. வேணு ராஜாவிடம் விசாரிக்கும்படியான சிக்கல் ஒனறும இருக்கவும் இலலை.

அனறு மாலை ஐநது மணிக்கு ராஜா வீடடிற்குப் புறப்படடபோது சமபிரதாயத்திற்காக வேணுவைப் பாாககப் போனுன. கறறை கறறையாகப் பைல்களை வைததுப் புரடடிக் கொணடிருநத வேணு ராஜாவைப் பாாத்துப புனமுறுவல புரிநதான! "சரி. போயவா. உன்பாடு யோகமதான. இனறிரவு பததுமணி வரை கூட எனககு வேலையிருககலாம. நீ போ...ஊமஹூம... இதில நீ ஒனறும எனககு உதவி செய்ய முடியாது. இநத விவகாரஙகளே உனககுப் புரியாது. நீ போயத் தூஙகு," என்று கூறி விடைகொடுத்தான வேணு.

ராஜாவுககு ஏதோ நெஞசில் வநது அடைத்தாற் போல் இருநதது ஆனுல் இநத விஷயததில் தான் சொல்வதறகு எனன இருககிறது? தன்னுல் எனன செய்ய முடியும்? எனறு நினைததபடி காரை நோககி நடநதான.

யாரோ இரண்டு சிப்பநதிகள வேணுவையும் கல்யாணியையும் பறறிப் பேசிக் கொண்டது காதில் விழுநதது ராஜா வேகமாக அங்கிருநது போய் விடடான்.

ராஜா அநத நிலைமைக்குத் தன் மனதைச் சரிப்படுத்திக கொளள முயன்றுன. அவனுல் முடிய விலலை. வேணுவும் சுசீலாவும் நடததிய குடுமப வாழக்கையில் ஏதோ கோளாறு இருநதது எனபது அவனுககுப் புரிநதது அவாகளோடு சமபநதமில்லாத ஆளாக இருநதால் மறறவர்களைப் போல் தானும் அதைப் பறறிக் கேலியாகப பேசி சிரித்துவிட்டு மறநது விடலாம். ஆனுல் ராஜாவால் அது முடியவில்லை.

தான் அவாகளோடு சம்பநதமில்லாத ஆளா? நிசசயமாக அப்படியல்ல. சுசீலாவோடு தனக்குச் சம்பநதமில்லை எனறு அவனுல் ஒருக்காலும் நினைக்க முடியாது. அவனுடைய இருதயத்தைப் பிரித்தெடுத்து

அப்பால் வைத்தாலும் வைத்து விடலாம்.. அவனுடைய வாழ்க்கையிலிருநது சுசீலாவைப் பிரித்தெடுத்து அப்பால் வைக்க முடியாது அவனுககும அவளுக்கும எவ்வித உறவும இல்லாமலிருக்கலாம. ஆயினும நினைவிலிருந்தும் அவளை எப்படி அபபுறப்படுத்திவிட முடியும்?

சுசீலா அமைதியாக, நன்ருக, சுகமாக வாழ்கிருள் எனறு தெரிநதால அதன்பின தான அவளைப் பற்றி நினைகக வேணடியதிலலை. அவளுடைய இலலறவாழவில் குறைபாடிருககிறது எனறு தெரிநதும தான் எவவாறு சும்மா இருகக முடியும? அநதக குறைபாட்டுக்குத தான காரணமாக இருநதால...?

மறுநாள காலை வழக்கமபோல ராஜா அலுவலகத் திற்குச செனருன, அனறும வேணுவும கலயாணியும் ஆபீசுககு வநதிருககவில்லை ராஜா தனனுடைய வேலைகளைக கவனிததுக கொணடிருநதான். சிறிது நேரத்திறகுப்பின வெளியே ஒரு கார் வநது நின்றது. "எஜமானியம்மாள வர்ருங்க" என்று பயூன் யாரோ ஒருவரிடம சொனனது கேடடது ஆபீசில பரிபூரண அமைதி நிலவியது. சிபபநதிகள எல்லோரும் மரியாதை யாக எழுநது நிறபதை ராஜா கவனித்தான. வேணு வுக்கு யாரும அத்தகைய மரியாதை செலுத்துகிற பழக்கம் இல்லை. ராஜா தன்னுடைய அறையிலிருந்து எட்டிப பார்த்தான். சுசீலா அவனுடைய அறையை நோக்கி வநது கொண்டிருநதாள்.

ராஜாவின மனம் துணுக்குற்றது. ஆனல் அவள் வேணுவின் பாாட்னர். முதலாளி. ஆபீஸிலிருநத அததனை பேரும் அவளுககு மரியாதை காட்டிய காரணம் அவனுக்குப் புரிந்தது. அவனையறியாமல் அவனும் எழுநது நினருன்.

- சுசீலா அவனுடைய அறைக்குள் வந்தாள். பேசும் போது அவளுடைய தொண்டையை அடைத்திருக்க

வேண்டும். "உட்காருங்கள ராஜா," என்று கூறிவிட்டு எதிரிலிருநத நாறகாலியை இழுததுப போடடு உட்காாநதாள். ர ா ஜ ா உட்காரவிலலே. நின்று கொண்டே இருநதான்.

"தொழிற்சாலே நிாவாகப் பொறுப்பை உஙகளிடம் ஒப்புவிததிருபபதாக வேணு சொன்ஞா. எனககு மிகவும சநதோஷம்...மிகவும் சநதோஷம, ராஜா..." என்று உணாச்சியுடன் கூறிஞள சுசீலா.

ராஜாவுக்கு எனன பேசுவதெனறு தெரியவில்லே. அவனுடைய உள்ளததில் உணாசசிகள கொநதளிததன. அவன ஊரைவிடடு ஓடிய அனறு உணாசசியுடன 'உன்னேத் தவிர வேறு யாரையும மணம் செயது கொளள மாட்டேன' எனறு சத்தியம செய்த இவளா? ஆமாம்.. அவளேதான! மனிதனின வாக்குறுதி களுக்கு ஆததம் இருப்பதாக இருநதால் அன்று முதல் அவனுடைய வாழகைகைத துணேவி! ஆமாம் சுசீலாவைப் பறறி அவன வேறுவிதமாக நிணேததததே இலலே. ம ா ய ா வு ம சியாமளாவும அவனுடைய இருதயததின முதல வாசலேககூட நெருங்க முடியாத காரணம என்ன? அநதச் சத்தியமே அலலவா? சியாமளா சுட்டுக கொலலபபடாமல் இருநதாலும் அவளேத தனனுல மணநது கொணடிருகக முடியாது. அதறகுத தன மனசசாட்சி இடம கொடுததே இருககாது...எபபடியாவது ஏதாவது தடை நேரிட்டே இருககும...

சுசீலா மட்டும் மணம் செய்து கொண்டாளோ...?

ராஜாவின் உள்ளத்தில் புழுங்கிக் கொண்டிருந்த உணர்ச்சிகளேச் சுசீலாவும் உணர்ந்தாள் என்றே தோன்றியது. அவள் அவனுடைய முகத்தைப் பார்த்துக் கொண்டே இருநதாள. ராஜா முகததைத் திருபபிக் கொண்டான. "நான இஙகே வேலேயை ஏறறுக கொண்டது உங்களுக்குத் திருப்தியளிப்பது கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்...உங்களுக்குத்

திருப்திகரமாக வேலை செய்து நல்லபெயர் எடுக்க முயற்சிப்பேன...'' என்றான ராஜா.

சுசீலாவின உள்ளம் பொங்கியது. அவளுக்குக் கண்ணீர வநது விடுமபோல் இருநதது ஆனால் தன்னுடைய உணாசசிகளை அடககிக கொள்வதில் அவள மிகவும் கெட்டிககாரி. கலலூரியில் படிக்கும் காலததிலிருநதே சிலைபோல அசையாமல் உடமபிலோ முகததிலோ எவவித சலனமும் இலலாமல் நடநது நடநது பழககபபடுததிக் கொணடவளல்லவா அவள? மிகவும நிதானமான குரலிலேயே சுசீலா கூறினாள: ''நான மிகவும மாறிபபோய விட்டதாக நினைக்கிறீாகள் ராஜா...ஆனால உணமை அதுவலல எபபொழுதாவது உஙகளுககு ஓயவிருக்கும பொழுது வீட்டுககு வாருங்கள். நாம சாவகாசமாகப பேசலாம்,'' என்றாள.

ராஜாவின் கணகள சுசீலாவின் கழுத்திலிருந்து தொங்கிக் கொண்டிருநத மாங்கல்யத்தையே பார்த்துக் கொணடிருநதன. ஒரு இநதுப் பெண்ணின் வாழ்க் கையில் வேறென்ன மாறுதல ஏற்பட வேண்டும்? சுசீலாவின பேசசு அவனுககுப் புரியவிலலை.

வேணுவும கல்யாணியும் காரில வநது இறங்கும் சப்தம கேட்டது. அவாகள பேசிக் கொண்டே வநதார்கள். ''சுசீலா வநதிருக்கிறாளா? புதுமானேஜரின் அறையிலா இருக்கிறாள?'' எனறு வேணு கேட்பது ராஜாவின காதில விழுநதது. ராஜாவின் உடல் குன்றிப் போயிறறு. ஆனால் சுசீலாவின முகத்தில் எவ்வித மாறுதலும் ஏறபடவிலலை ''ஏன நின்று கொண்டே இருககிறீாகள? உட்காருஙகள் ராஜா,'' என்றாள்.

ராஜா மெதுவாகத் தன் ஆசனத்தில் அமர்நதான். சுசீலா தன் கணவனை மதிக்கவில்லை என்பது அவனுக்குப் புரிநதது. வேணு—சுசீலாவின் குடும்ப வாழக்கையில் மிகப்பெரிய விரிசல் இருக்கிறது. அதைப் போக்க முயற்சிக்க வேண்டியது தனனுடைய கடமை...ஆமாம். அநத விரிசலுக்கு அடிப்படைக் காரணம் அவனுகத்

தான் இருக்க வேண்டும். அதனால் அதைப் போக்க வேண்டியதும் அவனுடைய கடமையேதான் என்பது அவனுககுப புரிநதது.

சிறிது நேரததிறகுப்பின் சுசீலா அங்கிருநது புறப் பட்டாள. அவள வேணுவின அறைக்குப போகவில்லை. வழியில தலைமைக் குமாஸதாவிடம என்னவோ கேட்டுக் கொணடு நினறாள. பிறகு நேராகப போய்த் தனனுடைய காரில் ஏறிககொணடு போய் விட்டாள.

சுசீலா தனனைப் பாாகக வநதிருநதது பற்றி வேணு தன்னிடம ஏதாவது கேட்பான என்று ராஜா எதிாபாாததான ஆனால வேணு அதைப்பற்றி நினைதத தாகவே தெரியவிலலை. ராஜாவிடம பேசும போதும் எப்பொழுதுமபோல உற்சாகமாகவே பேசினன.

வேணுவாக அவனுடைய குடும்ப வாழ்க்கையைப் பற்றி ஏதாவது பேசுவான. அபபொழுது சுசீலாவைப் புறக்கணித்துவிட்டு வேறு பெணணுடன சகவாசம் வைத்துக் கொண்டு திரிவதைப் பறறி அவனைக் கணடிததுப் பேசிவிட வேண்டும என்று ராஜா எதிர் பார்த்துக கொண்டே இருநதான.

ஒருநாள், இரண்டுநாள் என்று நாட்கள் போய்க் கொண்டே இருநதன. ஆனால ராஜா எதிர்பார்த்த சநதர்ப்பம மட்டும வரவே இலலை.

## அத்தியாயம் : 27

ஏறக்குறைய ஒரு மாதகாலம் இவ்வாறே கழிநதது. இநதக் காலம் முழுவதிலும் ராஜா சிறிதுகூட நிம்மதி என்பதே இல்லாமல் தவித்துக் கொண்டிருநதான் என்று கூறவேண்டும். வேணுவும், கல்யாணியும் ஒன்றாகப் போவதையும் வருவதையும் அவர்கள் அடிக்கடி மணிக்

கணக்காக வேணுவின் அறைக்குள்ளேயே பேசிக் கொண்டிருப்பதையும பார்க்கும் போதெல்லாம் ராஜா வின மனம் நெருப்பிலிட்டுப் பொசுககுவது போல் இருக்கும. ஆனுல் அவனுக எப்படி அதைப்பற்றிக் கேட்க முடியும?

ராஜாவுக்கு அதுதான் புரியவில்லே.

கடைசியாக அதற்கும் ஒரு சநதர்ப்பம் வந்தது. வேணு ஒருநாள அவனுடைய அறைக்கு வநதான். "ராஜா நானும கல்யாணியும் பங்களூர் போகிறேம். வருவதறகு இரணடு மூனறுநாள ஆகலாம் நீதான் ஆபீசைக் கவனித்துக் கொளள வேணடும்," என்றுன்.

"உட்கார் வேணு," என்றுன் ராஜா. அவனுடைய குரல் அவனுக்கே கடுமையாக ஒலித்தது வேணு பொசுக்கெனறு உட்காாநது விட்டான். "எனன? என்ன விஷயம?" என்றுன.

ராஜாவால் உடனே பேச முடியவில்லே. தட்டுத் தடுமாறியபடி, "வேணு...சுசீலாவை நீ மணநது கொணடு வேறு பெணணுடன் சுற்றிக்கொண்டு திரிவது உனக்கே நனருக இருக்கிறதா?" எனறு கேட்டு விட்டான். ராஜாவின முகம் சிவந்து போயிருநதது. உடல் பூராவும குபபெனறு வியர்தது விட்டது. அவனே யறியாமல் அவனுடைய உடல் நடுஙகிக கொண் டிருநதது.

ஆனுல், வேணு சிரித்தான். "இதைப்பற்றி நீ சுசீலாவிடமே கேட்டிருக்கலாமே ராஜா...கேட்டிருந் தால் இப்படிப் பதறறமடைநதிருக்க மாட்டாய்... எங்களுடைய தாம்பத்திய வாழ்க்கை பற்றி நான் சொல்வதைவிட சுசீலாவே சொன்னுல்தான் நன்ருக இருக்கும். அதனுல் நீ அவளிடமே கேட்டுத் தெரிநது கொள்வது நல்லது...

"ராஜா...மனித உரிமைகளுக்கு நான் மிகவும் மதிப்புக் கொடுக்கிறவன் என்பது உனக்குத் தெரியும்.

எந்த மனிதனுக்கும் நான் கெடுதல் செய்ய விரும்புவ தில்லை கெடுதல் செய்யும்படி நேர்ந்து விட்டால்...பிறகு அதறகு ஈடுசெய்யுமபடியான நனமை செய்யாமலும் விடுவதில்லை என்னிடம் எவ்வளவு பெரிய குறை அலலது குற்றம் வேண்டுமானுலும் இருக்கலாம்... அதைய பறறி இபபோது முடிவுசெய்து விடாதே . சுசிலாவையும விசாரிதத பிறகு முடிவுசெய்து கொள... நான் வரடடுமா ? கல்யாணி காததுக கொண்டிருக் கிருள. வருகிறேன் ராஜா...'' எனறு கூறிக்கொணடே போய் விட்டான வேணு.

ராஜா ஸ்தம்பித்துப் போய் அப்படியே உட்கார்நது கொண்டிருநதான இலேசாகச சிரிததுவிடடுச சொல்லி விட்டுப போககககூடிய விஷயமா இது...? அட கடவுளே...!

நெடுநேரம் வரை அப்படியே யோசித்துக்கொண்டு உட்காாநதிருநதான. பிறகு சுசீலாவைப பார்பபதற் காகப் புறபபட்டான. முதலாளி வீட்டுககுக் காரை ஓட்டுமபடிச கூறினபோது டிரைவா எனன நினைப்பானே எனற சநதேகம ராஜாவின மனததில் உறுததிறறு. ஆனுல டிரைவா எதுவும நினைக்கவிலலை.

சுசீலா வராந்தாவில் நின்று தோட்ட வேலையைக் கவனிததுக கொண்டிருநதாள். காடுபோல காணப் பட்ட அநதத் தோட்டத்தில் என்ன தோட்டவேலை நடைபெறுகிறது என்று அவன மனதில் ஆச்சரியம்கூடப் பட்டான்.

காரிலிருநது ராஜா இறங்குவதைப் பார்த்ததும் சுசீலா முன்னுல் வந்து, "வாருங்கள ராஜா..." என்று கூறி வரவேற்ருள. அவள் முகத்தில் எவ்வித சலனமும் காணபபடவிலலை. 'வாருங்கள். உள்ளே உட்கார்ந்து பேசுவோம் ..உட்காருங்கள்...காப்பி கொண்டு வரச் சொல்கிறேன்..."

ராஜா பதுமைபோல் ஆகிவிட்டான். விஷயத்தை எப்படி ஆரமபிபபது என்பது இன்னும் அவனுக்குப் புரியவில்லை

இரண்டுபேரும் சிற்றுண்டி சாப்பிட்டுக் கொண் டிருநதபோது, "வேணு பஙகளூர் போயிருக்கிறார்..." எனறு மெதுவாக ஆரமபிததான ராஜா.

"ஆமாம். அவரோடு கல்யாணியும் போயிருக் கிறாள்," என்றாள் சுசீலா.

ராஜா திடுக்கிட்டுப போனான். "சுசீலா...உனக்கு இநத விஷயம தெரிநதுமா சுமமா இருக்கிறாய் .? இது நனறாக இருககிறதா...?" என்று ஆவேசம் வநதவனபோல் கேட்டான. அவனுடைய உடல் பூராவும் பதறிக் கொண்டிருநதது.

திடீரென்று ராஜாவுக்கு ஒரு சநதேகம் வந்து விட்டது சுசீலாவும வேணுவைப போல் சிரிப்பாளோ என்று.

ஆனால் சுசீலா சிரிக்கவில்லை "சாப்பிடுங்கள் ராஜா...சாவதானமாகப் பேசுவோம," என்றாள்.

ராஜாவின் மனம் சிறிது சமாதானமடைந்தது. சமாதானமடைநததாகக் காட்டிக் கொண்டான். நாராயணா, நாராயணா, நாராயணா என்று அவனுடைய உள்மனம ஜபிககத் தொடங்கி விட்டது.

சுசீலாவோடு அவனும் சாப்பிட்டான். மைசூர் பாகும், தேன்குழலும, மெதுபகோடாவும், காப்பியும்... ஒவ்வொனறையும தொட்டுத் தொட்டுப் பார்த்துக் கொண்டு உட்காாநதிருநதான. ஒவ்வொரு துண்டாவது விழுங்குவதற்கு அவன எவவளவு கஷ்டப்பட்டிருப்பான் எனபது அவனுக்குத்தான் தெரியும்.

ஒருவாய் காப்பி பருகிய பிறகு சுசீலா திடீரென்று பேசத் தொடங்கினாள். "வேணு உங்களிடம் எங்கப்பா எழுதி வைத்த உயிலைப்பற்றிக கூறினாரல்லவா...?"

ராஜா 'ஆமாம்' என்று தலையை அசைத்தான்.

"எங்கப்பா அப்படி ஒரு உயிலே எழுதி வைத்தே இருக்க மாட்டார். ஆனால் வேணு எப்படியோ அவர் மனதைக் கலைத்து விட்டார். வேணுவை மணம் செய்து கொள்ள விருப்பமில்லையென்றால் வேறு யாரையாவது மணந்து கொள்ளும்படி அப்பா வற்புறுத்தி வந்தார். நான் யாரையுமே 'மணந்து கொள்ள முடியாது என்று கூறிவந்தேன் பிடிவாதமாக மறுத்துக் கொண்டிருந்தேன்... உங்களைப் பற்றி அப்பாவும் வேணுவும் ஒருநாள் பேசிக் கொண்டிருந்தது என் காதில் விழுந்தது. நீங்கள் எனக்கு எழுதிய கடிதத்தைப் பற்றி அப்பாவிடம் சொல்லி எனக்கு வருகின்ற கடிதங்களை ஒருநாளும் பிரித்துக்கூடப் பார்க்காத அப்பாவை அந்தக் கடிதத்தைப் படித்துப் பார்க்கும்படிச் செய்தது வேணுதான் என்பது அப்பொழுது எனக்குப் புரிந்தது."

ராஜா திடுக்கிட்டுப் போய் அவளைப் பார்த்தான். சுசீலா தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தாள்.

"அப்பா என்னைக் கண்டிப்பார். தன் தங்கைக்குக் கொடுத்த வாக்குறுதிப்படி உடனே என்னை வேணுவுக்கு மணம் செய்துவிட ஏற்பாடு செய்து விடுவார் என்று தான் வேணு எதிர்பார்த்திருக்கிறார். அந்தக் கடிதத்தால் உங்களுடைய படிப்புக்கே உலை வந்துவிடும், நீங்கள் ஊரைவிட்டே ஓடும்படியாக நேரிடும் என்று வேணு எதிர்பார்க்கவில்லை.

"வேணு ஓரளவு கெட்டவரே தவிர, முழுக் கெட்டவர் அல்ல. அதனால்தான் அப்படிச் சொல்கிறேன்... அதுமட்டுமல்ல. உங்களை அந்தக் காதல் கடிதம் எழுதும்படித் தூண்டியதே தான் தான் என்பதையும் ஒருதடவை வேணு என்னிடம் ஒப்புக் கொண்டு விட்டார்... இதிலிருந்து வேணு ஆரம்பத்திலிருந்தே என்னை மணம் செய்து கொள்வதற்காக எவ்வளவு சதிசெய்து வந்திருக்கிறார் என்பது உங்களுக்கு ஓரளவு புரியும் என்று நினைக்கிறேன். இந்தச் சதியின் அடுத்த கட்டம்தான் உயில்...

"நான் யாரையுமே மணம் செய்து கொள்ள முடியாது என்று பிடிவாதமாக இருந்ததால் என் அப்பா என்மேல் கோபம் கொண்டிருந்த சமயத்தைத் தெரிந்து கொண்டு, அவர் நோய்வாய்பட்டு மிகவும் நலிந்து போயிருந்த நேரத்தில் வேணு அந்த உயிலை எழுதுமபடியாகச் செய்திருக்கிறார்.

"அதுமட்டுமல்ல அந்த உயிலைப பற்றிய விஷயமே என்அப்பா இறந்து போகும் வரை எனக்குத் தெரியாது"

"அப்பா இறந்துபோன பிறகு ஒரு வாரத்துக்குப் பின்னால் அப்பாவிடம் அடிக்கடி ஆலோசனை கேட்க வரும வக்கீல் சுந்தரராஜன ஒருநாள என்னிடம் வந்தார். உயிலைப் பார்வையிட எப்பொழுது எனக்கு சௌகரியப்படும் என்று கேட்டார்.

"நான திடுக்கிட்டுப் போனேன. அப்பொழுதே உயிலின் நிபந்தனைகளைத் தெரிந்து கொள்ள விரும்பினேன. அவர் சொன்னதைக் கேட்ட பிறகு எனக்கு ஒன்றுமே ஓடவில்லை .என்றால் ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை.

"அப்பா எனக்கு மூன்றுமாத அவகாசம் கொடுத்திருந்தார். அதற்குள நான வேணுவை மணந்து கொள்ள வேண்டும். இல்லாவிட்டால சொத்துக்களை இழந்து விடவேண்டும்

"சொத்துக்களை இழந்து விடலாம் என்று நான் முடிவு செய்தேன்...ஏதாவது ஒரு ஆபீஸில் சாதாரணமான ஒரு வேலை கிடைக்காதா? ஒரு பெண்ணுக்கு என்ன செலவாகும்? மாதத்திற்கு ஐம்பது, அறுபது ரூபாய் இருந்தால் போதும. மிச்சம இருப்பதைப் பாங்கில்கூடப் போட்டு வைக்கலாம் என்று நினைத்தேன்.

"ஆனால் இதற்குள் அப்பாவின் நண்பர்கள், என்னுடைய சிநேகிதைகள், அக்கம்பக்கம் வசிப்

பவர்கள், தெரிந்தவர்கள், எல்லோருக்குமே உயிலைப் பற்றித் தெரிநது...எல்லாம் வேணுவின் வேலைதான். எல்லோரும் வேணுவை மணநது கொள்ளும்படி என்னை வற்புறுத்தத் தொடங்கி விட்டாாகள.

"ஒரு நாள் வேணுவே என்னிடம் அதைப் பற்றிப் பேசினுர். அவருக்கு என்மேல் காதலோ ஊதலோ எதுவுமே கிடையாது எனறு வெளிப்படையாகவே சொலலி விட்டார். என்னுடைய அப்பா அவரை மிகவும் வசதியாக வளர்தது விடடதாகவும பணககாரனுகவே தன்னுல் வாழ முடியும் என்றும், பணமில்லாமல் தன்னுல ஒரு நாளும் வாழவே முடியாதெனறும் கூறினுா. அதனுல் உயிலினபடி சொததை அனுபவிப் பதற்கு வசதியாக நாம இரண்டு பேரும் பெயரளவுக்கு மணம செய்து கொளளலாம் எனறு யோசனை கூறினுர். அவசியமாகிறபொழுது மணவிலககுச செய்து கொண் டால் போகிறது. கலயாணம எனற ஒரு சடஙகினுல் எதுவும கெட்டுப போகப் போவதில்லை,'' என்ருர்.

"எனக்கு அநத யோசனை சரியானதாகவேபடடது. எனக்கு வேறென்றுமே தோன்றவிலலை. அப்பா விதித்த கெடுவுக்கு இனனும் மூன்று நாட்களே பாககி இருநதன.

"ராஜா...அந்தச் சமயத்தில் நீங்கள் இநத ஊரில் இருநதிருநதால, அல்லது உஙகளைப் பற்றிய தகவல் ஏதாவது கிடைத்திருநதால் கூட இநத ஏற்பாட்டிற்கு நான் சமமதிததிருக்க மாட்டேன . ஆனுல்..."

மகா தைரிய சாலியான சுசீலா திடீரென்று முகத்தை மூடிக் கொண்டு அழத் தொடங்கி விட்டாள.

ராஜாவின் உடல் நடுங்கிக் கொண்டிருநதது. இப்படிப்பட்ட ஒரு பயங்கரமான விஷயத்தைப்பற்றி அவன் கேள்விப்பட்டதே இல்லை. ஜனக்கும்பலின் நடுவில் வெடி குண்டு வீசுவது அவனுக்குப் பயங்கர மாகத் தோன்றவிலலை. ஆயுதம் ஏநதி வழிப்பறி செய் வதோ,கூட்டமாகக கிராமங்களில்புகுந்து கொள்ளையடிப்

பதோ கூட அவனுக்குப் பயங்கரமானவையாகத் தோன்றவில்லை. கொலைக்குற்றம் சாட்டப்பட்டுத் தூக்கு மேடையை எதிர்பார்த்துக் கொண்டிருநத போது கூட அவன் அவ்வளவு அதிர்ச்சியடைநது போயிருக்கவில்லை.

கடவுளே !

இது எவ்வுளவு பயங்கரமானது?

பெண்கள் தாம்பத்திய வாழ்க்கையை ஆணும் பெண்ணும் செய்து கொளளும் வியாபார ஒப்பநதமாக நினைக்கத தொடஙகி விட்டால் அதன பிறகு சமுதாயத்தின் நிலைமை எனன ஆவது...?

ஆண்விலங்குகளும் பெண்விலங்குகளுமாகச் சேர்ந்து சுயேசசையாகக் குட்டிபோட்டு எஙகாவது பிளளை வளர்ககுமிடஙகளில விட்டு விட்டு அவரவர் பாட்டுககுச் சுறறித திரியும் வாழ்க்கை முறை அல்லவா ஏற்பட்டு விடும?

முதிர்ச்சியடைந்த மிருகங்களிடம் கூடக் காணப் படாத இநத வாழககை முறையை நோக்கியா மனிதன் முன்னேறிக் கொண்டிருக்கிறுன்?

மனிதனுடைய பண்பை வளர்க்காத சிநதனைகள், எழுத்து, பகுத்தறிவுப் பிரச்சாரம் இவைகளெல்லாம் சோநதல்லவா மனித இனத்தை இந்த நிலைக்குக் கொண்டு வநதுவிட்டன?

மனிதனுக்கு விடுதலை வேண்டியது தான். சுதந்திரம் சுயேச்சை எல்லாம் வேண்டியவைதான். ஜாதி, மதம் ஆகிய கட்டுக்களிலிருநது விடுபட்டு, வறுமை, அறியாமை, அடிமைத்தனம் எல்லாவற்றையும தகர்த்தெறிந்து விட்டு மனிதன் முன்னேற வேண்டியது அவசியம் தான். அநத முன்னேற்றம் மனிதன் தன்னுடைய உயர்ந்த உன்னத நிலையை அறிநது கொள்வதற்குப் பயன்பட வேண்டும். அன்பு, நேர்மை, பண்பு

ஆகிய குணங்களால் மேலான நெறியிலே நின்று தன்னுடைய ஆத்மாவின் உயர்வைப் புரிநது கொள் வதறகாகப் பயனபட வேண்டும். தசையின் தேவை களுககு அடிமைப்பட்டுத் தசையை வளாத்துக் கொண்டே இருக்கும நிலைமை ஒழிநது ஆத்மாவின் தேவைகளுக்காகப் பாடுபட்டு ஆத்மாவை வளர்ப் பதறகு உதவவேண்டும்.

சுசீலா மிகவும் உத்தமமான ஒரு வைராக் கியத்தை மேறகொண்டிருநதாள எனபது உண்மை தான. ஆனல் தநதையின் சொத்துக்களை இழநது விடக் கூடாதெனபதறகாக வேணுவை அவள மணநது கொண்டது தவறு. மணநது கொண்டபின அவனுடைய மனைவியாக வாழாதது அதை விடப் பெரிய தவறு.

ராஜாவின கண்களிலிருநது கண்ணீர்த்துளிகள் முத்து முத்தாக உதிர்நது கொண்டிருநதன. உணர்ச்சி வசப்பட்ட நிலையில் அவன பேசத் தொடங்கினுன்.

"சுசீலா எனக்காக நீ மிகவும் கஷ்டப்பட்டு விட்டாய்...எவ்வளவோ கொடுமைகளை அனுபவித்து விட்டாய ..இவவளவு கஷ்டஙகளை நீ அனுபவித்தே இருக்க வேணடியதில்லை சுசீலா

"பகைவனையும் நேசிக்கும் பண்பை வளர்க்க வேண்டும என்பது பாரதத்தில உதித்த ஞானிகளின் மேலான கருத்து. வேணுவை மணநது கொளவதற்கு முன்பு நீ அவனை நேசிகக முயன்றிருகக வேண்டும் சுசீலா. அல்லது மணநது கொண்ட பிறகாவது அவனைக் காத லிகக முயற்சிததிருக்கலாம்:

"திருமணம் என்பது பத்துப் பேருக்கு முன்னுல் செய்து கொளளும் ஒரு அர்த்தமற்ற சடங்கல்ல சுசீலா பெண் கழுத்திலே அணிநது கொளளும் மாங்கல்யம் சமு தாயத்தை ஏமாற்றுவதற்காகப் போட்டுக் கொள்ளு ஆபரணமும் அல்ல...

"உலக மாதாவான உமையவளே தான் கழுத்தில் தரித்திருக்கும மாஙகலயத்தாலஅதற்கு உயர்வு கொடுத் திருககிருள. இருதய ஸதானததிலே பெண் தரிக்கும் மாஙகல்யம் மூலஸதானததில இருககும் விக்கிரகத்தைப் போல் உயாவானது அநதத் தெயவத்தை விடச் சக்தி வாயநதது அதறகு இணையான பொருள உலகத் திலேயே வெறுெனறு கிடையாது...

"மனிதன் தெய்வத்தையும் தர்மத்தையும் மறந்து விட்ட காலத்திலும தாலிக கயிறறின மகததுவத்தை மறநது விடககூடாது தாமபததிய வாழககையின் புனி தத் தன்மையை மாததிரம மனித இனம காப்பாற்றத் தவறிவிட்டால்...அதன பின இநத உலகம வெறும் விலங்குகளின கூடடம வாழும நரகம ஆகிவிடும் சுசீலா. தாய் பிளளை எனற முறை கூட இலலாமல் போய் விடும...

"உன்னை நான குறை சொலலுகிறேன் என்று நினைக் காதே மனிதாகளில நீ மிகவும உயர்நதவள். நீ செய் திருப்பது போனற ஒரு காரியத்தைச சாதாரணமான வர்களால் செய்யவே முடியாது. ஆனுலும் தர்மம அது வல்ல, சுசீலா.

"நீ என்னை மணநது கொள்வதாக வாக்களித்தது நம் இரண்டு பேருக்கும மாத்திரம் தான் தெரியும. ஆனுல வேணுவை நீ மணநது கொண்டது உலகத்துக்கே தெரியும்...நம இரண்டு பேருடைய ஆத்மாக்களின் சக்தியைவிடச் சமுதாயத்தில உள்ள அத்தனை பேரும் இருதய பூர்வமாகச் செய்த ஆசீர்வாதத்திற்குச் சகதி அதிகம் சுசீலா...இதைத் தவிர உனக்கு என்ன செய் வதென்றே எனக்குப் புரியவில்லை..."

கண்ணீர் வடித்தபடி தேமபிக் கொண்டே கூறினுன் ராஜா. சுசீலா அதை ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். "என்ன ராஜா? நம்முடைய இருதய பூர்வமான விருப்பத்திற்கு உள்ளதை விட அர்த்தமில் லாத சடங்குகளுக்குத் தான் அதிகமான மதிப்புக்

கொடுக்க வேண்டும் எனறு சொலலுகிறீர்கள்?'' என்று கேட்டாள.

ராஜா தலையை அசைத்தான். "சடங்குகள் எல்லாம் அாத்தமற்றவை அல்ல சுசீலா. அப்படியென்றால் இதற்குள சடஙகுகளே இலலாமல் போயிருககும். இயநதிரங்களின ஓட்டததிறகுக் கூட ஒரு பொதுவான ஒழுஙகுநிலை வேணடியிருக்கிறது மனித சமுதாயததின ஓட்டததிற்கு அபபடி எதுவுமே தேவையிலலை எனறு சொலலலாமா...?''

சுசீலா பெரு மூசசு விட்டாள். "காதல் மாறவே மாறுதது எனற கதைகளை நான் நமபிக் கொண்டிருந்தேன...'' எனறுள. அவளுடைய இருதயம வரணடு போய் விட்டமாதிரி இருநதது. வெறி பிடித்தவள் போல எங்கேயோ வெறிததுப பாாககத் தொடஙகி விட்டாள.

ராஜாவின மனதில ஒரு புயல் வீசிக் கொண்டிருநதது. சுசீலாவின இநத மனப்போககுககு காரணம மேல்நாட்டு நாகரிகத்தின மோதலதான். ஆனால் நமமுடைய சமுதாயததில இததகைய காரியங்கள நடை பெறுவதைப் பறறி நாம சிநதிபபதறகுக் கூட முடியாது...

சமுதாயத்தில் எத்தனையோ அக்கிரமங்களும பாவ வினைகளும் நடைபெறுகினறன என்பது உண்மைதான். ஆனால மனிதன தனனை விடச் சிறநதவர்களைப பாாத்து மேலும் மேலும் வியப்படைய வேண்டும என்று நினைக்க வேணடுமே தவிர, தாழவடைநது போக முயற்சிக்கக் கூடாது...

தர்மத்தையும ஒழுக்கத்தையும் விடத் தனிப்பட்ட மனிதனின் ஆசைகள, விருப்பஙகள முதலியவற்றை ஒருககாலும் பெரியவையாக நினைக்கவே கூடாது.

சுசீலா அக்கினி சாட்சியாகத் தான் மணந்து கொண்ட ஒருவனுக்கே மனைவியாக இருக்க வேண்

டியவள். அதைத் தவிர வேறுவிதமாக நினைப்பதற்குக் கூட இடமில்லை.

ராஜா தடுமாறியபடி எழுநதிருநதான். எங்கோ பார்த்தபடி, "சுசீலா...இனிமேலாவது வேணுவை நேசிககக் கறறுககொள அவனுடைய மனைவியாக வாழ முயறசிசெய...அதுதான தாமம அதுதான நியாயம்," என்று கூறினன.

சுசீலா பதில் சொனனளா, இல்லையா என்பதைக் கூடக் கவனிககவில்லை. தடுமாறியபடி எழுநது நடக்கத் தொடஙகி விட்டான சுசீலாவும வேணுவும் மனமொத்த தம்பதிகளாக வாழ வேணடும். அதறகுத்தான ஏதாவது செய்ய வேணடும என்ற ஒரே ஒரு எண்ணம்தான் அவன் மனதில மேலோங்கி நின்றது

## அத்தியாயம் : 28

ராஜாவின் மனம் நிலைகொள்ளாமல் தவித்துக் கொண்டிருநதது. திருமபத திரும்ப யோசித்து யோசிதது அவன தத்தளிததுக் கொணடிருநதான்.

சுசீலா தனக்களித்த வாக்குறுதியை நினைத்து அவன நீணடகாலம காத்துக் கொணடிருநதான் எனபது உணமைதான். சுமார் பதினைகு ஆண்டுக் காலம தன வாழககையில் குறுக்கிட்ட சியாமளா, மாயா போன்றவர்கள் தன் இருதயத்தின் முதல் வாசலைத் தாணடி உளளே பிரவேசிக்கக்கூட அவன் அனுமதிக்கவில்லை.

அந்த வாக்குறுதியால் அவர்களுக்கிடையே காந் தாவ மணமே நடைபெற்று விட்டது போன்ற ஒரு மனோபாவமும் அவனுக்கு ஏற்பட்டிருந்தது உண்மை தான்.

ஆனால்...,

அவளுடைய தநதையின விருப்பப்படி சாஸதிரோக் தமாக நடைபெறற ஒரு திருமணததிறகே சகதி அதிகம எனறு ராஜா நினைததான். தனனுடைய தநதையின் விருபபம் எதையும, சிறிதும மறககாமல் பூாததி செய்வதற்கான பாககியம் தனககுக கிடைக்க வில்லை அது சுசீலாவுககுக் கிடைததிருக்குமபோது அதைமீறி நடபபது சரியல்ல எனறே அவனுக்குத் தோனறிறறு.

காதல்—கலயாணம இரண்டிலும் கல்யாணமே முககியமானது. காதலாகள காதலின் வேகததில் எததனையோ பிரதிகஞைகள செயது கொளகிறாாகள. அவை இருதய பூாவமானவையாக இருநதபோதிலும் மணபபநதலில பததுபபோ முன்னிலையில அககினி சாட்சியாக ஒரு பெண ஒருவனுககு மனைவியாகத தனனை அாபபணிததுக் கொணட நிகழ்ச்சிக்கு ஈடாகாது எனறே ராஜா நினைத்தான.

திரும்பத் திரும்ப வேணுவும சுசீலாவும மனமொதத தமபதிகளாக வாழச செய்வதறகு என்ன வழி எனபதைப் பறறியே அவன் யோசிததான்.

எதிலும் மனம் செல்லாமல் தற்செயலாக அவன் தினத்தாளைப் புரட்டிக் கொண்டிருநதபோது அநதச் செயதி அவன கணணில் பட்டது. 'கன்னியாகுமரியில— படபபிடிபபு—பிரபல சினிமா நட்சத்திரம் மாயாதேவி கலநது கொண்டார்...' படங்கள் .. வர்ணனை எல்லாம அநதப் பத்திரிகையின வழக்கமான பாணியில் காணப்பட்டன.

ராஜாவின் மனதில் திடீரென்று ஒரு யோசனை தோன்றிற்று. உடனே காரை எடுத்துக் கொண்டு புறப்பட்டு விட்டான்.

மாயா இருக்குமிடத்தைக் கண்டு பிடிப்பதில் அவனுக்குச் சிரமம் எதுவும் ஏற்படவில்லை.

அப்பொழுது மாலே நேரம் மாயா கடற் கரையில் தனியாக உட்காாநது கொண்டு தொலே நோககியால கடலில வநது கொணடிருநத படகுகளேப் பாாத்துக கொணடிருநதாள படபபிடிப்புககு வநத வாகள சுறறிலும ஆஙகாஙகு அமாநது கடறகாட்சிகளே ரசிததுக கொணடிருநதாாகள

மாயாவைப் பாாத்தவுடன ராஜாவின உள்ளததில் உணாசசிகள பொஙகின இமயததில—ஸிமலாவில் அவளேத தனியாக விடடுவிடடுச சொலலாமல் ஓடி வநத காடசி அவனுககு நினேவு வநதது அவள தனனேப் பறறி எனன நினேததிருபபாள எனபதை 'நினேககும் போது அவனுடைய உளளம வெடகததால குனறிப் போய விடடது

ஆனுல, இனி எதையும யோசிப்பதால பயனிலலே. துணிசசலுடன அடிமேல அடியாக எடுதது வைதது அவளே நோககி நடநதான

மாயா தனனே நோக்கி யாரோ வருவதை உணாநது சடடெனறு திருமபிப பாாததாள. ராஜா அவள முனனுல மணடியிடடுக் கெஞசத தொடஙகி விடடான். உணாசசிகளால வாாததைகள தடுமாறின. குரல் தழுதழுததது. "மாயா...இமயததின உசசியிலே நினறு நீ கேடட கேளவிககுக குமரியனனேயின காலடியில பதிலகூற வநதிருககிறேன...எனனே ஏறறுக் கொள வதறகு உனககு விருபபமிருநதால்...இதயமிலலாமல் நான உனனிடம நடநது கொணடதை நினேதது உனனுடைய மனம மாறிப போகாமல் இருநதால... நான உனனே மணநது கொளளத தயாா," எனறுன.

மாயா எழுநது அவனே நோக்கி ஓடிவநதாள. அவன முகததை மாாபோடணேத்துக் கொணடு, "எனன வாாததை ராஜா இது...? கணவன் தனனுடைய மனேவியை எபபடி வேணடுமானுலும கொடுமைப்

படுத்தலாம். அதற்காக மனைவி தன் கணவனைப் புறககணிக்க முடியுமா?'' எனறு கூறி விமமினாள.

கணவன்—மனைவி...!

"மாயா உண்மையாக நீ என்னை இத்தனை கால மாக உன கணவனாகவா நினைத்துக் கொணடிருநதாய்?" எனறு ஆச்சரியததுடன் கேட்டான.

மாயா வியபபுடன அவனைப் பார்த்தாள். "நாடோடிகளாகச சுறறிக கொணடிருநத காலததில் எததனைநாள எனகையால உஙகளுககுச சோறு கொடுத் திருபபேன்? எததனை இரவு உஙகள அருகில படுததுத் தூஙகியிருபபேன? அநதக காலததில் எலலாம நான ஒனறும தெரியாத பெண அலல ராஜா...

''வயிறறுப் பிழைப்புக்காக எத்தனையோ வேஷம் போடுகிறோம. சினிமா, நாடகம் எல்லாம அபபடித் தான ஆனால இனறளவும என மனதையும் உடலையும் உஙகளுககாகப பரிசுததமாக வைததிருககிறேன் ராஜா '' எனறாள.

ராஜாவின் கண்களில் கண்ணீர வழிநதது மாயா வின கணகளிலும கண்ணீர ஆறாகப பெருகிக் கொணடே இருநதது.

தறசெயலாக அங்கு வநதுவிட்ட சாஸ்திரி "அடடே. நீஙகள இரணடு பேருமா? சநதோஷப்பட வேண்டிய நேரததில அழுது கொணடா இருககிறீாகள? அட அசடடுபபிளளைகளே...?'' எனறு கூறி அஙகலாய்த் தார்.

"நாங்கள் அழவில்லை சித்தப்பா...ஒருவரை ஒருவர் புரிந்து கொளள முயல்கிறோம். ." என்று கூறிக் கொண்டே கணணீரைத் துடைததாள் மாயா.

"நன்றாக இருக்கிறது. புரிநது கொளளவா முயல் கிறீர்கள்.? சரி சரி...கல்யாணம் முடிந்து விட்டால்

இன்னும் நன்ருகப் புரிந்து கொள்ளலாம். எப்பொழுது கல்யாணம்?'' என்று கேட்டார் சாஸதிரி.

"இப்பொழுதே...'' என்ருன் ராஜா.

"ஆமாம். இப்பொழுதே...'' என்று கூறிச் சிரித்தாள் மாயா.

"சரி. நடத்தி விடுவோம். சங்கீதம், காட்சிகள், கோயில் எல்லாம இருக்கினறன. ஒரு மஞ்சள கயிறும் பொன்னும தேவை. இநத ஊரில கிடைக்கும் எனறு நினைக்கிறேன,'' என்று கூறிவிட்டு அபபொழுதே திருமண ஏறபாடுகளைச செயவதறகாகப புறப்பட்டு விடடார் சாஸதிரி.

ராஜாவின் திருமணச் செய்தியைக் கேள்விப்பட்டதும் வேணு பூரிததுப் போனுன். ஆனநதம் அவனுக்கு நிலை கொளளவிலலை.

சுசீலாவைத் திருமணம் செய்து கொண்ட பிறகு வேணுவிடம ஒரு விதப் பழிவாஙகும மனேபாவம் உண்டாகத் தொடஙகியது சுசீலாவை மனைவியாக நடத்த முடியாததால் தனககு ஒனறும் நஷடமிலலை என்று காட்டிக் கொளவதறகாகவே தனனுடைய ஆபீஸில் ஏராளமான அழகிய பெண்களை வேலைககுச் சோத்தான். கல்யாணியுடன அவனுககிருநத முறை கெட்ட உறவு கூட எல்லோருக்கும் வெளிபபடையாகத் தெரியும்படியாகவே நடநது கொண்டான. தான் சுசீலாவை அலட்சியப்படுத்துவதாக மறற எல்லோரும் நினைக்கும்படியாக நடநது கொண்டான்.

ஆனல் அதையெல்லாம் பார்த்துச் சுசீலா சிறிது கூடச் சலனம் அடையவில்லை. அதற்கு மாருகத் தன்னுடைய செயல்களை நினைத்து வேணுவே வெட்கப் படும் படியாக நடந்து வந்தாள். தான் ஏதோ உயர்ந்த உலகத்தைச் சேர்நதவள் போலும், வேணுவைப் போன்ற அற்பமான பிராணிகள் அப்படித்தான் நடநது கொள்

வார்கள் என்பது தனக்குத் தெரிந்த விஷயம் தான், அத ஞல் தான் கவலைப்படப் போவதில்லை என்பது போலும் நடநது கொணடாள்

தன்னுடைய நடத்தை சுசீலாவின் மனதை உறுத்த வில்லை சுசீலாவின நடத்தைதான் தனனுடைய மனதை உறுததுகிறது என்ற விஷயம வேணுவுக்கு மிகுநத வேதனை அளிததது ஒரே வீட்டில, கணவன மனைவி என்ற உறவோடு கணவன மனைவியாக இலலாமல் வாழக்கை நடத்துவது மிகவும கொடுமை...அதைப போன்ற ஒரு சஙகடத்தைத தாங்கிக கொளளவே முடி யாது என்பதை வேணு பலகாலம அனுபவிததுக் கொண் டிருநதான.

டெல்லியில் ராஜாவைக் கண்டு பிடித்த போது தன் னுடைய சஙகடத்துககு ஒரு விமோசனம. கிடைதது விட்டதாகவே ராஜா நினைததான் சுசீலாவுக்கு விவகா ரததுக கொடுதது ராஜாவுககு மறுமணம செய்து வைத்து விடுவதறகுக் கூட அவன தயாராக இருநதான். அதனுல தனககுக கேவலம என்றே அவமானம என்றே வேணு நினைக்கவே இலலை.

ஆனுல், ராஜா திடுதிப்பென்று இப்படி ஒரு காரியத் தைச் செயது விடுவான் என்று வேணு எதிரபார்க்கவே இலலை. எதிரபாராத இநதத் திருபபம-சுசீலாவை நிாககதியாககி, முழுவதும தனனுடைய தயவை எதிர் பார்க்க வேண்டியவளாககிவிட்டது எனபதை வேணு உணாநதான. சுசீலாவைப பழி வாங்கிக கொளள இது சரியான சநதர்பபம், இததனை காலமும தனககுக் கிடைக்காத புதிய வாய்பபு ஒன்று தனககுக் கிடைத்து விட்டது என்ற எணணததால வேணுவின மனம கொக் கரிககத தொடங்கி விட்டது.

இநத அதிாச்சியின் முழுவேகத்தையும் சுசீலா அனு பவிக்க வேண்டும. புழுபபோல அவள் துடிப்பதைத்தான் பார்த்து ரசிக்க வேணடும். அவளுடைய அன்புக்காகத் தான் ஏங்கி ஏங்கித் தவித்த போது அனுபவிதத துன்

பத்தை எல்லாம் அவளும் அனுபவிக்க வைக்க வேண்டும் என்ற எண்ணங்கள வேணுவின் உளளததில் துள்ளின.

அதனுல் ராஜாவின் திருமணச செய்தியை அவன் உடனே சுசீலாவுக்குத் தெரிவிக்கவில்லே. ராஜாவையும் அவன மனேவியையும் வரவேறபதறகுப் பிரமாணட மான ஏறபாடுகளேச செயதான.

பாணடு வாததியம் மேளதாளஙகளோடு வரவேற்பு ஊர்வலம் ஆடம்பரமாக நடைபெற்றது புஷ்ப விமானம் போல அலஙகரிககப்பட்ட காரில் ராஜாவும மாயாவும் வீட்டை நெருஙகிக கொணடிருநத சமயம வேணு அவ சரம் அவசரமாகக் காரில வநது இறஙகிச சுசீலாவைத் தேடிக் கொணடு போனுன

"சுசீலா...ராஜாவும் அவன் மனேவியும ஊர்வலம் வநது கொணடிருககிருர்கள நானும நீயும மனமொதத தமபதிகளாக நினறு அவனே வரவேறக வேணடும் எனபது ராஜாவின ஆசை...நீ எனன சொலகிருய்?" எனறு கேட்டான வேணு

சுசீலா திடுககிட்டுப போய் வேணுவின முகத்தைப் பாாததாள வேணு கூறுவது உண்மை எனபது அவனு டைய முகத்தில் பொஙகி வழிநது கொணடிருநத ஆனந தத்திலிருநதே அவளுக்குத தெரிநது விட்டது பாணடு வாததியததின ஓசை மிகச சமீபததில கேடடது.

"அதோ ஊாவலம வீட்டு வாசலுககு வநது விட்டது. புறப்படு சீககிரம," எனறு அவசரப படுத் தினுன வேணு.

சுசீலா தனனேச சமாளித்துக் கொண்டாள.

"இதோ உடைமாறறிக கொணடு வந்து விடு கிறேன," என்று கூறிவிட்டு வேகமாக அறைக்குள சென் ருள.

வேணு காத்துக் கொண்டிருநதான். வெகு நேரம் காத்துக் கொண்டிருந்தான். சுசீலா வரவே இல்லே.

* * *

ஊர்வலம் வீட்டு வாயில் முன் நின்றது.

மங்கள ஆரத்தி வரும் என்று எல்லோரும் எதிர் பார்த்தார்கள்.

"சுசீலா .!" என்று வேணு பயங்கரமாக அலறிய குரல் ஒலித்தது.

ராஜா காரிலிருந்து குதித்திறங்கி மாளிகைக்குள் ஓடினன. பினனல மாயா ஓடினள. அவளுக்குப் பின்னல் சாஸதிரி ஓடினா. ஊர்வலததில வநதவாகள பரபரப் போடு பினனல ஓடினாகள.

"சுசீலா சுசீலா..." என்று தலைதலையாகப் போட்டுக் கொணடு வேணு அரற்றிய குரல விணணைப பிளந்தது. ராஜாவைப் பார்ததததும் அவன, "ஐயோ...சுசீலா நம்மை ஏமாறறி விட்டாளடா...ராஜா...அவள வைரத்தைத் தினறு உயிரை விட்டு விடடாள...நான் செய்த பாவத்திற்கு எநதவழியிலாவது பிராயச் சித்தம் செய்து விட வேணடும எனறு தவிததேன...அதற்கான சநதர்ப் பமே கொடுககாமல எனனை மகாபாவியாக்கி விட்டு மடிநது விட்டாளடா ராஜா ." எனறு

முகத்தை மூடிக் கொண்டு ராஜா விம்மினன்.

மாயா தேமபினள.

யாரோ போலீஸுக்குத் தெரிவிக்க வேண்டும் என்று பேசிக் கொணடாாகள். அதறகுள் போலீஸே அஙகு வநது விட்டது.

அங்கிருந்த பரபரப்பான நிலையை ஏற்று எதுவும் கவனிக்காத இனஸபெகடர் நேராக ராஜாவை நோக்கிச் சென்றா.

"நீ தான் ராஜாவா...நாராயணய்யர் மகன் ராஜா...?" என்று கேட்டார்.

"ஆமாம் நான் தான் அந்த ராஜா..." என்று உணர்ச்சியற்ற குரலில் கூறினன் ராஜா.

"பம்பாயில் பனிரெண்டு வருஷங்களுக்கு முன்னல் வெடி குண்டு வீசிய குற்றம் ஒன்று, போலீஸுக்கு அகப் படாமல் தலைமறைவாகப் போய்விட்ட குற்றம்இரண்டு;

ஆகிய குற்றங்களுக்காக நான் உன்னைக் கைது செய்கிறேன்," என்றார் இன்ஸ்பெக்டர்.

"நல்ல சமயத்தில் வந்து சேர்ந்தீர்கள் இன்ஸ்பெக்டர்," என்று நாத் தழு தழுக்கக் கூறியபடித் தன் இரண்டு கைகளையும் நீட்டினான் ராஜா.

இன்ஸ்பெக்டர் அவன் கைகளில் விலங்குகளை மாட்டினார். மாயா வீறிட்டு அலறியபடி ஓடி வந்து ராஜாவைக் கட்டிக் கொண்டாள். "ராஜா...இதற்காகவா என்னைத் திருமணம் செய்து கொண்டீர்கள்? இதற்காகவா இவ்வளவு காலம் நான் காத்துக்கொண்டிருந்தேன் ?ராஜா ...என்னையும் உங்களோடு அழைத்துக்கொண்டு போங்கள் . என்னையும் கைது செய்யச் சொல்லுங்கள். நான் தனியாக இருக்கமாட்டேன் ஒரு வினாடிகூட உங்களை விட்டுப் பிரிந்து உயிரோடு இருக்க மாட்டேன் " என்று கதறினாள் மாயா.

ராஜா தன் கண்களிலிருந்து வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொள்வதற்குக் கூட முடியாதவனாக நின்றான். "அழாதே மாயா... அழாதே... பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைத் தகாப்பதாக நினைத்துக்கொண்டு வெடிகுண்டு வீசிய குற்றத்திற்காக எனக்கு அதிகமான தண்டனை விதிப்பார்கள் என்று நான் நினைக்கவில்லை .. சீக்கிரமே விடுதலையடைந்து வந்து விடுவேன்... இன்பகரமான குடும்ப வாழ்க்கை நடத்தும் பாக்கியம் நம் இருவருக்கும் வெகு சீக்கிரம் கிடைக்கும்...இவ்வளவு காலம் தைரியமாகத் தனியாக வாழ்க்கை நடத்திய உன்னால் இன்னும் சிறிது காலம் பொறுத்துக் கொள்ள முடியும்... தைரியமாக இரு மாயா .கண்களைத் துடைத்துக் கொள். கவலைப்படாதே..." என்று ஆறுதல் கூறினான்.

இதற்குள் சுசீலாவின் மரணத்தைப் பற்றித் தெரிந்து கொண்ட இன்ஸ்பெக்டர் அதைப் பற்றிக் கவனிப்பதற்கு வேண்டிய ஏற்பாடு செய்துவிட்டு ராஜாவைப் போலீஸ் ஜீப்பை நோக்கி அழைத்துச் சென்றார்.

மாயா தேம்பிக் கொண்டு நின்றாள்.

* * *

## முடிவுரை :

வாழக்கை சோதனைகள் நிறைநதது எநதவிதமான இலககண எல்லைககும உடபடாதது. ராஜாவின வாழக்கையில நடைபெற்றவறறைப போனற சம்ப வஙகள உலகததில நடைபெற முடியுமா எனறு அதிசயபபடுவதறகில்லை அப்படியும் நடைபெறலாம. நடைபெற முடியாது எனறு சொல்லவே முடியாது.

மனிதனுடைய பணபை வளாப்பதறகாக, மனோ திடததை வனமையடையச செயவதறகாகவே இலக் கியததைப படைக்க ஆரமபிததாாகள இராம பிரானின நோன்பு, சீதையின கற்பு, விஜயனின் வீரம், அரிசசநதிரனின சத்திய விரதம, சிபிச சககரவாததி யின தயாள குணம இவையெல்லாம கடவுள மேல் நமபிககை வைதது விதியின முன வளைநது விடாதவர் கள வெறறி பெறுகிறாாகள எனபதையே சுட்டிக காட்டு கினறன

இநதக் கதையில வரும் பாத்திரங்களைப் பற்றிக் குணதோவு விமாசனம் செய்ய நான விருமபவிலலை. சில சமயஙகளில மனிதாகள தாஙகள விருமபுவதை அடைவதறகாகச சிறிய தநதிரஙகளைச செயகிறாாகள. அவையே பெரிய மாறுதலகளை உணடாககியும விடுகினறன. வேணுவின கதை அப்படிபபட்டதுதான. என் மனம வேணுவிற்காகவும்கூட அனுதாபப்படவே செயகிறது.

பெணணின் கறபு ஒனறுதான சமுதாயத்தின ஒழுககததிறகே ஆணிவேர் என்பதில அசைக்க முடியாத நமபிககை உடையவன நான கறபைப பொறுததவரை யில விளையாட்டாகக் கூட யாரும் விஷப் பரீட்சையில் இறங்கவே கூடாது என்பது என்னுடைய கருத்து.

இநத நவீனத்தைப பொறுதத வரையில், "என்னால் முடிநததைச செயதிருககிறேன. இதன் தன்மையையும் பயனையும் பறறித் தீாமானிககவேணடியது உலகத்தின் பொறுபபு," என்றே தாழமையுடன் கூறிக் கொளள விருமபுகிறேன்.

—முற்றும்—

